


# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 12.10.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

ஆஸ்காரைச் சுற்றும் ஆமிர் கான்!

வாடகைத் தாய் வரமா... சாபமா?

டி.எம்.எஸ்-ஏ.ஆர்.ரஹ்மான் மியூஸிகல் மீட்டிங்!

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ் ™

வாடிக்கையாளர்களின் வசதிக்கேற்ப **தீபாவளியை** முன்னிட்டு
மும்பையிலும் எங்கள் புடவைகளின் **கண்காட்சி** மற்றும் **விற்பனை**

## NAVIMUMBAI TAMIL SANGAM

**9-A, Sector, (Behind Vashi Bus Termines)**
**Navi Mumbai - 400 703. Ph: 022-27662434**
**From : 11-10-2008 to 26-10-2008**

# 50%

காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள்
விழாக்கால சிறப்பு
தள்ளுபடி விற்பனை

பழைய காஞ்சிபுரம்
வெள்ளி ஜரிகை
பட்டுச்சேலைகள்
எந்த நிலையிலும்
எக்ஸ்சேஞ்ச்
செய்யப்படும்

Master & Visa Card Accepted

சில்க் காட்டன் சேலைகள். சுங்கடி காட்டன் சேலைகள்
எம்ப்ராய்டரிங் சேலைகள். பேன்ஸி சுடிதார்கள் உள்ளன.

எண்: 13/7, [அடி தளம்] வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை – 4.
[கபாலீஸ்வரர் கோயில் அருகில்] போன் : 044 : 2493 3097, 2461 0444



# மிரட்டும்

''காதலில் விழுந்தேன்' திரைப்படத்தைத் திரையிடக் கூடாது என்று மிரட்டியிருந்தால், மதுரையில் உள்ள காவல்துறை அதிகாரியையோ அல்லது கலெக்டரையோ பார்த்தல்லவா புகார் சொல்ல வேண்டும். ஆனால் அப்படி எதுவும் கூறவில்லை. புகார் வந்தால் அரசு வேடிக்கை பார்க்காது'' - முதல்வரின் இந்த அறிக்கையை ஜோக்காக நினைத்துச் சிரிக்கிறார்கள் மதுரை மக்கள். கலாநிதி மாறனின் சன் பிக்சர்ஸ் தயாரித்துள்ள முதல் படமான 'காதலில் விழுந்தேன்', எதிர்பார்த்தபடி மதுரை மற்றும் சுற்று வட்டாரத்தில் சர்ச்சையில் விழுந்துவிட்டது.

'மதுரை மற்றும் சுற்று வட்டார மாவட்டங்களில் திரைப்படத்தைத் திரையிட்டால், உங்களுக்குப் பல பிரச்னைகள் வரும்' என்று படம் ரிலீஸ் தேதிக்கு முன்னர், தியேட்டர்காரர்கள் மிரட்டப்பட்டார்கள். இந்த நிலையில் புகார் கொடுக்க எவருக்குத் தைரியம் இருக்கும்? அப்படியே துணிந்து புகார் கொடுத்தால், அவர்கள் தொடர்ந்து மதுரையில் தொழில் செய்யமுடியுமா? - இதை மறந்துவிட்டு, 'யாரும் புகார் கொடுக்க முன் வரவில்லை' என்று முதல்வர் திருநெல்வேலி அல்வா கொடுத்திருக்கிறார்.

'நாக்க மூக்க' பாட்டுக்காகப் படம் ஹிட்டாகும் என்று மாறன் சகோதரர்கள் நம்பியதாலேயே, உமாபதி என்பவர் தயாரித்து ரெடியாக வைத்திருந்த படத்தை, முழு உரிமையுடன் வாங்கினார்கள் விநியோகஸ்தர்கள். ஆனால், இப்போது மதுரை சர்ச்சை காரணமாக, இப்படத்துக்கு மற்ற இடங்களில், ''ரஜினி படத்துக்கு நிகரான கலெக்ஷன்'' என்கிறார் படத்தின் பி.ஆர்.ஓ. மௌனம் ரவி.

'இதில் நாம் தளர்ந்துவிட்டால், அடுத்து வெளிவரத் தயாராக இருக்கும் மற்ற படங்களும் பெரும் பிரச்னையைச் சந்திக்கும்' என்று மாறன் சகோதரர்களும் அரசியல் கட்சித் தலைவர்களை அணுகி ஆதரவைச் சேர்த்துக்கொண்டார்கள்.

மத்திய இணையமைச்சர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், 'ஒரு திரைப்படத்தைத் திரையிட விடாமல் தடுப்பதுதான் காமராஜ் ஆட்சியா?' என்று குரல்கொடுத்தபின், 'இனி பிரச்னை வேறு வடிவத்தில் செல்லும்' என நினைத்த தலைநகர் அதிகார

'காதலில் விழுந்தேன்' படத்தில்...

# மதுரை!

வட்டம், மதுரைப் பகுதி பாளையக்காரருக்குக் கெஞ்சும் குரலில்சொல்ல, கடும் எரிச்சலுடன் படத்தைத் திரையிட அனுமதி கொடுத்திருக்கிறார். ஆனால், இந்தப் பிரச்னை நடக்கும்போது தயாரிப் பாளர் சங்கமும், இயக்குநர்கள் சங்கமும் மௌன மாக இருந்துவிட்டன.

''நியாயம் பேசுவதற்குப் பதிலாக மௌனம் காத்தால், நமக்குத் தேவையான காரியங்களை நடத்தி முடித்துக் கொள்ளலாமே' என்ற எண்ணம் தான், இந்த அமைப்புகளை நடத்துபவர்களிடம் இருக்கிறது'' என்கிறார் இயக்குநர் ஆர்.சி.சக்தி.

தியேட்டரில் படம் வெளியிடுவதைத் தடுக்க முடியவில்லை என்றவுடன், இப்போது படத்தின் ஒரு லட்சம் சி.டி.க்களைத் தயார்செய்து இலவச மாக விநியோகித்து வருகிறது ஒரு கூட்டம். கலா நிதி மாறன் யாரிடம் புகார் கொடுத்தாலும், இதை யெல்லாம் தடுக்க முடியாது என்பதே உண்மை நிலை.

''மாறன் சகோதரர்களுடன் மோதல் தொடர் வது நமது குடும்பத்தின் எதிர்காலத்துக்கு நல்ல தல்ல'' என்று மற்றொரு வாரிசு மன்றாடுவதை செவிகொடுக்க யாரும் தயாராக இல்லை. சமாதான முயற்சிகளின் முன்னேற்றம் அல்லது பின்னடை வைப் பொறுத்து, மாறன் சகோதரர்கள் தங்கள் மீடியா பலத்தை, தி.மு.க.வுக்கு எதிராக பயன் படுத்துகிறார்கள் என்பது தி.மு.க. தலைமையின் ரத்த அழுத்தத்தை எகிறச் செய்கிறது. அதுபோன்ற சமயங்களில் 'அவர்களை ஒழிக்க வேண்டும்' என்ற 'தெற்கத்தி வசனம்' நியாயப்படுத்தப்படுகிறது.

புகார் பதிவாவதற்குக் காத்திருக்காமல், 'மிரட்டப்படும் மதுரை திரையரங்குகளுக்கு தமிழக காவல் துறை பாதுகாப்பு அளிக்கும்; படத்தைத் தைரியமாக ஓட்டுங்கள்' என்றல் லவா முதல்வர் சொல்லியிருக்க வேண்டும்? இதைக் கேட்கக்கூட தமிழகத்தில் இன்று ஒரு குரல் இல்லாமற்போய்விட்டது!

**- கௌசி**





**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (*விமானத்தபால்*) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

●கே.எல்.புனிதவதி, மேலகிருஷ்ணன்புதூர்

? ''தீவிரவாதத்துக்கு எதிரான சட்டங்களைக் கடுமையாக்க வேண்டும்'' என்கிறாரே இரண்பேடி?

! சட்டம் கடுமையாவதால் துஷ்பிரயோகம் அதிகரிக்கக்கூடும். கண்காணிப்பு (உளவு - ஒற்றாடல்) தீவிரமாக வேண்டும். விழிப்புணர்வும் பரவலாக வேண்டும். காவல் துறையும் பொதுமக்களும் இணைந்து பணியாற்றும் வகையில் அணுகுமுறை அமைதல் அவசியம். இரும்புக்கரம் கொண்டு ஒடுக்கி, தண்டனைகளைத் துரிதமாக வழங்க வேண்டும். இதற்காக தனி அமைச்சகத்தை உருவாக்கலாம்.

● இந்து, கள்ளக்குறிச்சி

? 'வேலூர் சிறைக்கு, பார்க்க வந்தது பாசத்தால் அல்ல' என்று வை.கோ. கூறியுள்ளது குறித்து?

! கலைஞரை வை.கோ. கட்டித் தழுவியதும்; சிறையில் அவரை சந்தித்ததால் மனம் உற்சாகமானதாய்ச் சொன்னதும்கூட வை.கோ.வின் நடிப்புதானா? மனிதநேய அணுகுமுறையில்கூட அரசியல் நடிப்பா? கலைஞரின் மீதான குற்றச்சாட்டு வை.கோ.வுக்கும் பொருந்தும்தானே?

● கே.வேலுச்சாமி, சிறுநாயக்கன்பட்டி

? உலகில் மிகச் சிறந்த தானம் எது?

! மீளாத் துயிலில் ஆழ்ந்த ஹிதேந்திரனின் பெற்றோர், அவனது இதயத்தை, மாற்று அறுவைச் சிகிச்சைக்காக அளித்த அருந்தானம்.

# 'நாக்க மூக்க'வுக்கு விளம்பரம் ஓவராக இருக்கிறதே?



* கூறும் குற்றச்சாட்டு!

● வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு

? வெளிநாட்டு வார, மாத இதழ்களின் பதிப்புகளை இந்தியாவில் ஆரம்பிக்க மத்திய அரசு அனுமதித்துள்ளது குறித்து தராசுவின் கருத்து...?

! எல்லா பத்திரிகைகளுக்கும் அப்படி அனுமதி வழங்கப்பட்டுள்ளதாகத் தெரியவில்லை. தொழில் - விஞ்ஞானம் தொடர்பான சர்வதேச விநியோகமுள்ள பத்திரிகைகள் இங்கேயே பதிப்பிக்கப்படுவதில் பொருளாதார ரீதியான அனுகூலம் உண்டு - இரு தரப்பிலும்.

● ஆர்.ஜெனிந்த், ஆவணத்தாங்கோட்டை

? மாப்பிள்ளைக்கோ மணப்பெண்ணுக்கோ எய்ட்ஸ் தொற்று

நோய் இருந்தால், மருத்துவ தர்மப்படி அந்த விவரங்களை வெளியில் பகிரங்கமாகத் தெரிவிக்கமுடியாது என்று மருத்துவத் துறை சொல்வது சரியா?

! மருத்துவ தர்மம் மதிக்கப்பட வேண்டியதுதான். அதேபோல, திருமணத்துக்கு முன்னதாக மணமக்கள் மருத்துவப் பரிசோதனைக்கு உள்ளாவதும் ஒரு தர்மமாக மதிக்கப்பட வேண்டும்.

● எஸ்.சோமசுந்தரம்,
அன்னலக்ரகாரம்

? லால்பகதூர் சாஸ்திரி, மொரார்ஜி




* விடுபட்ட உண்மை!




* நடத்திய...



* ... பூஜை!

தேசாய், ராஜாஜி போன்ற அப்பழுக்கற்ற சிறந்த நிர்வாகத் திறமை உள்ளவர்கள் இனி கிடைப்பார்களா?

! கொடி காத்த குமரன், வ.உ.சி, சுப்பிரமண்ய சிவா போன்ற அப்பழுக்கற்ற தேச பக்தியும் தொண்டுள்ளமும் கொண்டவர்களாக நாம் மாறும்போது, சிறந்த நிர்வாகிகளும் குறையின்றிக் கிடைப்பார்கள்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? டெல்லி மற்றும் பிற நகரங்களை உலுக்கிய குண்டு வெடிப்பில் வெடிகுண்டுகளை பத்து வயதுச் சிறுவன்தான் தயாரித்தான் என்ற செய்தி அதிர்ச்சியைத் தரவில்லையா?

! எய்தவன் இருக்க அம்பை நோகக்கூடாது. அரும்பைப் பறித்து, கசக்கிப் பிழிகிற மூர்க்கர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும்.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி

? 'தமிழ்நாட்டில் ஆட்சியில் பங்கு பெறுவது பற்றி எந்தக் கருத்தையும் பேசக்கூடாது' என்று காங்கிரஸ் நிர்வாகிகளுக்கு சோனியா காந்தி உத்தரவிட்டுள்ளாராமே?

! 'வரும் நாடாளுமன்றத் தேர்தலில் தி.மு.க.வின் கூட்டணி தேவை' என்கிற காங்கிரஸ் தலைமையின் எண்ணத்தில் இதுவரை எந்த மாற்றமும் இல்லை என்பதை காங்கிரஸார் புரிந்துகொள்வார்கள். 'மாநிலத்தில் சுய ஆட்சி; மத்தியில் மறுபடி கூட்டாட்சி' என்று தி.மு.க.வினர் கனவு காண்பார்கள். மக்களா

வது விழிப்புடனிருந்தால் சரி.

● அ. சுகுமார், காட்பாடி

*? சமீபத்தில் தங்களை வருத்திய சம்பவம்...?*

! சென்னையில் ஒட்டியிருந்த 'குரு என் ஆளு' படத்துக்கான விளம்பரம் - பெண்களைக் கொச்சைப் படுத்தி, தலைகுனிய வைத்த வியாபார யுக்தி.



✱ போடும் உத்தரவு

● எ.டபிள்யூ. ரபீ அஹமத், சிதம்பரம்

*? அக்டோபர் இரண்டாம் தேதி முதல் பொது இடத்தில் புகை பிடித்தால் அபராதம் என்று சொல்கிறாரே அன்புமணி. இது தனிமனித சுதந்திரத்தைப் பறிப்பதாகாதா?*



✱ விதிக்கும் கட்டுப்பாடு



✱ நாடும் கடுமை

! ஒரு மனிதனின் சுதந்திரம் பக்கத்திலுள்ள மனிதனுக்கு உபத்திரவமாக மாறினால் அரசு தலையிடுவதுதான் சரியான செயல். புகைபிடிப்பது உபத்திரவம் மட்டுமல்ல; பிடிப்பவர், அவர் பக்கத்திலிருப்பவர் - இருவரது உடல் நலத்துக்கும் கேடு.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

*? நடிகை ரோஜாவுக்குப் பேய் பிடித்து விட்டதாக மந்திரவாதியை வைத்து சிரஞ்சீவியின் பிரஜா ராஜ்ஜியக் கட்சியினர் பேய் விரட்டும் பூஜை நடத்தியது பற்றி...?*

! அநாகரிக அரசியலின் இன்னொரு அடையாளம்.

● அ.சா.குருசாமி, செவல்குளம் ❐

*? மக்களுக்கு ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி தருவதாகப் பெருமைப்படும் ஆட்சியாளர்கள், அது போன்ற அரிசியைத் தங்கள் வீடுகளில் பயன்படுத்துவார்களா?*

! நிச்சயம் மாட்டார்கள். ஆனால், நீங்கள் கேட்டுள்ள கேள்வி, பசித்த நெஞ்சங்களில் எழுவதற்கான சாத்தியக்கூறுகள் மிகக் குறைவு என்பதால், அரசியல்வாதிகளின் உள்நோக்கம் வெற்றி பெறுகிறது.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி ★

*? 'நாக்கு மூக்க' பாடல் விளம்பரம் ரொம்ப ஓவராகச் செய்யப்படுகிறதே?*

! பாடல் மட்டுமல்ல; அந்தப் படமே ஏதோ உலக மகா அதிசயம் போல் 'சன்' செய்தியிலேயே விவரிக்கப்படுவது அபத்தம். சொந்தக் குழந்தை என்பதற்காக ஓவராகக் கொஞ்சினால் பார்க்கிறவர்களுக்கு வெறுப்பு வந்துவிடும்.

● வெ.ராம்குமார், வேலூர்

*? "நரகாசுரன் இறந்த நாள்தான் தீபாவளி. தமிழகத்தில் தி.மு.க., அ.தி.மு.க. - இரு கட்சிகளும் இல்லாத நாள்தான் உண்மையான தீபாவளி" என்கிறாரே விஜயகாந்த்?*

! "சாதுக்களை ரக்ஷித்தால் போதாது; துஷ்டர்களை அழித்தாலும் போதாது; தர்மம் நிலைநாட்டப்பட வேண்டும்; அப்போதுதான் உண்மையான தீபாவளி" என்கிறார் நராக! ○

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்: **அ.சா.குருசாமி,** செவல்குளம்

★ ரூ.50/- பரிசு பெறுபவர்: **ஆர்.ராஜதுரை,** சீர்காழி

(சிங்கூர் சிற்றரசர் புத்திதேவர் அரசவையில் மிடுக்குடன் கொலுவீற்றிருக்கிறார். அமைச்சர் சூரகேசி தன் உரையை ஆரம்பிக்கிறார்)

சூர : கொற்றவரே! நம் பங்கூர் நாட்டின் வடகோடியில், சிறு தேர்கள் செய்வதற்காக, தொழிலதிபர் ரத்தினவர்மருக்குப் பலகாணி நிலங்களை ஒதுக்கியிருந்தோம் அல்லவா..

புத்தி : சூரகேசி! நிறுத்தும்! உரையின் நடுவில் 'அல்லவா' என்கிற பதத்தை உபயோகித்தால், எமக்குப் பிடிக்காது என்று உமக்குத் தெரியும் அல்லவா...?

சூர : மன்னவரே! தாங்களே 'அல்லவா' என்று சொல்லிவிட்டதால் நான் 'அல்லவா' சொல்வதில் தடையில்லை அல்லவா. ஆகையாலே, என் சிற்றுரையைத் தொடர்கிறேன். தொழிலதிபர் ரத்தினவர்மருக்கு அளித்த இந்தச் சலுகையை எதிர்த்து, ஒரு பெண்மணி போர்க்கொடி உயர்த்தியிருக்கிறார் மன்னவா.

புத்தி : (கண்கள் சிவந்து) என்னது? போர்க்கொடியா? அதுவும் ஒரு பெண்ணா? யாரது?

சூர : அதை நான் எப்படிச் சொல்வேன் மன்னவா?

புத்தி : ஏன்? வாயைத் திறந்து, தெள்ளு தமிழில் இடையில் 'அல்லவா'க்களைத் தெளிக்காமல் சொல்லலாம் அல்லவா?

சூர : (சங்கடத்துடன்) வேறு யாரும் இல்லை மன்னா. அடிக்கடி நம் ஆராய்ச்சி மணியை அடித்துத் தொல்லை அளிக்கும் அமதா தேவியார்தான்.

புத்தி : என் அருமை மகள் இளவரசி அமதா தேவியாரா காரணம்?

சூர : 'இந்தத் தொழிற்சாலையை வரவிடக் கூடாது' என்கிறார் மன்னா. ராஜ பாட்டை அடைப்புப் போராட்டம் நடத்தப் போகிறார் என்று நம் ஆஸ்தான ஒற்றர்கள் தெரிவித்திருக்கிறார்கள் மன்னா.

புத்தி : ம்? இப்போது அவள் எங்கே இருக்கிறாள்?

சூர : நம் ஆராய்ச்சி மணி கனமாக ஒலிக்கவில்லை என்று காரணம் காட்டி மணி பீடத்தின் கீழே காலவரையற்ற உண்ணாவிரதம் இருக்கிறார் மன்னா.

## 2

(அந்தப்புரத்தில் குளித்து முடித்த கையோடு இளவரசி அமதாதேவி, தன் நீண்ட கூந்தலுக்கு அகில் புகை மரியாதை செய்து கொண்டிருக்கிறார். அவரது அன்னையார் சாயாதேவி கோபத்துடன் வருகிறார்)



**ஜே.எஸ்.ராகவன்**

**சாயா :** அமதா! ஏன் இப்படி நீ ஒரு சண்டைக்கோழியாய் இருக்கிறாய்? சிறு தேர் தொழிற்சாலை வருவதில் என்ன குறை கண்டாய்?

**அமதா :** அன்னையே! பங்கூர் ஒரு செல்வம் கொழிக்கும் நாடு என்பதில் உங்களுக்கு ஐயம் உள்ளதா?

**சாயா :** இல்லையே.

**அமதா :** நம் நாட்டு இளைஞர்கள் ஏற்கெனவே உண்டு கொழுத்து, தினவும் தோள்களுடன் வலம்வருகிறார்கள். சிறு தேர்களும் கிடைக்க ஆரம்பித்தால், விசையுடன் நடந்து போகாமல் தேர்களிலே போக ஆரம்பிப்பார்கள். புழுதி பறக்கும் பங்கூரின் பாட்டைகளில் நடந்தே போக முடியாது. தவிர, விரைந்து போகும் தேர்க்கால்களில் சிக்கி மக்கள் மாண்டு போகும் சாத்தியக்கூறுகள் உண்டல்லவா?

**சாயா :** *(சிந்தனையுடன்)* அட ஆமாம்...

**3**

*(அமதாதேவியும் அவளது காதலன் சத்தியவர்மனும் நிலா ஒளியில் ஒருவரை ஒருவர் பருகிக் கொண்டிருக்கிறார்கள்.)*

**சக்தி :** சபாஷ்! அமதா, சிறு தேரை பங்கூரிலிருந்து கிளப்பிவிட்டாயே!

**அமதா :** நம் நாட்டில் சிறு தேர்கள் புழக்கத்தில் வந்தால் நடந்துபோகும் எளிய

# சிங்கூரும் சிறுதேரும்!



உடற்பயிற்சி கூட இல்லாமல் அவர்கள் இன்னும் கொழுத்துவிடுவார்கள் என்று நினைத்து, உடற்பயிற்சிக் கருவிகள் தயாரிக்கும் தொழிற்சாலை அந்த இடத்தில் ஆரம்பிக்க எண்ணினீர்கள்.

**சக்தி:** அதற்கு என் தந்தையார் ரத்தின வருமன் உடன்படவில்லை. இருப்பினும் உன்னுடைய சொற்படி, பங்கூர் இளைஞர்களின் ஆரோக்கியம் கருதி உன் தந்தையார் தேருக்கு நிலமில்லை என்று கையை விரித்து விட்டதால், என் தந்தையார் பணிய வேண்டியதாயிற்று. இனிமேல் என்ன? நம் திருமணம்தான்.

**அமதா :** திருமணம் இப்போது இல்லை. உம் தொழிற்சாலை செயல்பட ஆரம்பித்து ஆண்டொன்று போன பின்னர் தான்.

**சக்தி :** அவசரப்பட்டால்?

**அமதா :** உங்கள் தொழிற்சாலையை எதிர்த்து முற்றுகைப் போராட்டம்தான்!? ●

சர்க்கரை சாப்பிடுவதால் சர்க்கரை வியாதி வருவதில்லை; ஆனால், சர்க்கரை வியாதி வந்துவிட்டால், சர்க்கரை சாப்பிடக் கூடாது என்ற எடக்குமடக்கான இந்த வியாதியால், ஏகத்துக்கும் திண்டாடிப் போய்த்தான் இருக்கிறார்கள் இனிப்புப் பிரியர்கள்.

'இனிப்பை இனி கனவுலகூட நெனைக்கப் பார்க்க முடியாது' என்று நொந்து நூடுல்ஸான சர்க்கரை வியாதிக்காரர்களுக்கு வாயில் திருப்பதி லட்டை வைத்ததுபோல் வரப்பிரசாதமாக வந்ததுதான் 'ஷுகர் ஃப்ரீ'க்கள்!

'காஃபி, டீ, பலகாரங்களில் சர்க்கரைக்குப் பதில் ஷுகர் ஃப்ரீயைக் கலந்து, சுவையாகச் சாப்பிடுங்கள். இதனால் இரத்தத்தில் சர்க்கரை அளவு கூடுவதில்லை' என்று மருத்துவ நிபுணர்கள் + தயாரிப்பு நிறுவனங்கள் ரெக்கமண்ட் செய்ய... நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு ஷுகர் ஃப்ரீ உணவுகளைச் சாப்பிட்டவர்கள் பலரும் இப்போது அதிர்ச்சியில்.

ஷுகர் ஃப்ரீ சாப்பிடுவதால் ரத்தத்தில் சர்க்கரை அளவு கூடுவதில்லை என்று விளம்பரதாரர்கள் கூறுவதை ஏற்றுக்கொள்ள முடியாது என்றும், இதனால் பல விதமான ஆபத்துகள் ஏற்படுகின்றன என்றும் சில மருத்துவ ஆய்வுகள் தெரிவித்திருப்பதுதான் இந்த அதிர்ச்சிக்குக் காரணம்.

இதில் எதை நம்புவது? என்ற குழப்பமும் பீதியும் கிளம்பிப் புலம்பவைத்துக்கொண்டிருக்கின்றன.

# இனிப்பு

இந்த ஒட்டுமொத்த சந்தேகத்தையும் சர்க்கரை வியாதி நிபுணர் டாக்டர் வீ.பாலாஜியிடம் முன் வைத்தோம்.

''இயற்கையான பழங்களிலிருந்து எடுக்கப்படும் இனிப்புச் சுவைதான் ப்ரக்ட்டோஸ். இதுதான் ஷுகர் ஃப்ரீ. இதை மருத்துவரின் ஆலோசனையின்படி காஃபி, டீயில் குறிப்பிட்ட அளவே கலந்து சாப்பிட வேண்டும். இப்படிச் செய்தால் இரத்தத்தில் சர்க்கரை அளவு அதிகரிக்காமல் இருக்கும். ஆனால், 'சர்க்கரை வியாதிக்காரர்களும் ஸ்வீட் சாப்பிடலாம்' என்று குலோப்ஜாமூன், அதிரசம், சாக்லேட் என விளம்பரம் செய்யும் சில தயாரிப்புகளில், ப்ரக்ட்டோஸ் இல்லாமல் போவதற்கு வாய்ப்பு இருக்



கிறது. இதனால் பாதிப்புகள் ஏற்படுமே தவிர... ஷுகர் ஃப்ரீயால் பாதிப்பு என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் தினம் தினம் ஏதோ ஓர் ஆராய்ச்சி நடந்து கொண்டுதான் இருக்கிறது.

ஷுகர் ஃப்ரீ பெரும்பாலும் கல்லீரலில் படிந்து பாதிப்பை ஏற்படுத்துவதாகவும், லெப்டின், இன்சுலின் உள்ளிட்ட ஹார்மோன்கள் வெளியேறுவதைத் தடுத்து விடுவதாகவும், பசியைத் தூண்டும் செல்களை அழித்து விடுவதாகவும் சொல்லப்படுகிறதே... மேலும் ப்ரக்ட்டோஸ் எனப்படும் ஷுகர் ஃப்ரீ சேர்வதால், உடலில் இன்சுலின் எதிர்ப்புத் தன்மை அதிகரித்து கொழுப்பு அதிகமாகி, உடல் பருமன் மற்றும் இதய பாதிப்புகள் வரும் அபாயம் உண்டு என்றும் சொல்லியிருக்கிறதே? என்றால்,

''மருந்துவரின் ஆலோசனையின்படி அளவாக

# ஆபத்து!

ஷுகர் ஃப்ரீயைச் சாப்பிட்டால், எந்தப் பாதிப்பும் ஏற்படாது. மேலும் ஏதோ ஒரு சிலரைக் கொண்டு செய்யப்படும் ஆராய்ச்சிகளை முழுமையாக நம்பிவிட முடியாது. முழுமையான ஆராய்ச்சிக்குப் பிறகே எதையும் நம்பலாம். இதுவரையிலும் ஷுகர் ஃப்ரீயால் ஆபத்து என்று அதிகாரபூர்வமான ஆராய்ச்சிகள் எதுவும் தெரிவிக்கவில்லை. அதனால் இதுபோன்ற வதந்திகளைக் கண்டு சர்க்கரை வியாதிக்காரர்கள் அதிர்ச்சி அடையத் தேவையில்லை. அளவுக்கு மிஞ்சினால் ஆபத்துக்கள் வரத்தான் செய்யும்.

'பத்து வருஷமா சர்க்கரை வியாதிக்கு மருந்து சாப்டேங்க. அதனால என்னோட கிட்னி பாதிப்படைஞ்சுடுச்சு' என்று அறியாமையால் புலம்புவார்கள். உண்மையில் சர்க்கரை வியாதிக்கு மாத்திரைகள் சாப்பிடுவதால் கிட்னி பாதிக்கப்படுவதில்லை. உடற்பயிற்சி இல்லாமை, வாய்க்குப் பூட்டுப்போட்டு இனிப்புக் கட்டுப்பாடு இல்லாமல் இருந்தது... என்று சர்க்கரை வியாதிக்கான வரைமுறைகளைக் கடைப்பிடிக்காமல் போவதுதான் கிட்னி பாதிப்புக்குக் காரணம்.

சர்க்கரை வியாதிக்கான மாத்திரைகள் மட்டுமல்ல. எந்த மாத்திரை மருந்துகளுமே தகுந்த ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டுதான் வருகின்றன. அதை மருத்துவர்களின் ஆலோசனைப்படி தேவையான நேரத்தில் உபயோகிப்பதால் உடலுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது.



✱ டாக்டர் வீ.பாலாஜி

அரிசி உணவில் சர்க்கரையைத் தூண்டும் 'கிளைசிமிக் இண்டெக்ஸ்' என்ற வேதிப் பொருள் உள்ளது. இது காய்கறிகளில் குறைவாக இருக்கும். எனவேதான் அரிசி உணவைச் சாப்பிடும்போது காய்கறிகளை அதிகமாகச் சாப்பிடவேண்டும். எடை அதிகரிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதையெல்லாம் கடைப்பிடித்தாலே சர்க்கரை வியாதி கட்டுப்பாட்டில் இருக்கும். மாத்திரை மருந்துகளைக் குறை கூறாதீர்கள்'' என்கிறார் டாக்டர் வீ.பாலாஜி.

- கமலி



# கல்கி



2008 அக்டோபர் 12
ஸர்வதாரி புரட்டாசி 26
மலர் : 67
இதழ் : 11

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## வேண்டாம், வக்கிரக் கொடுமைகள்!

ஒரிஸ்ஸாவில் நீடிக்கின்ற மதக் கலவரங்கள் மிகக் கொடியவை. ஆகஸ்ட் 25 கந்தமால் மாவட்டத்தில் நடந்த கொடுமையை விவரித்து, சகோதரி நிர்மலா எழுதிய கடிதத்தின் பேரில் மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்காமல் மௌனம் காப்பது நாட்டுக்கே தலைகுனிவு. சகோதரி நிர்மலா, அன்னை தெரஸாவால் தோற்றுவிக்கப்பட்ட கத்தோலிக மத அமைப்பின் தலைவி ஆவார். காவல் துறையினர் முன்னிலையிலேயே, திவ்ய ஜோதி கிறிஸ்துவ மையத்தைச் சேர்ந்த ஒரு கன்னியா ஸ்த்ரீ பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டதும், அருட்தந்தை செல்லா என்பவர் அடித்து நொறுக்கப்பட்டதுமான கொடுமைகள் சகோதரி நிர்மலாவின் கடிதத்தில் காணப்படுகின்றன. இச்செய்திகள் பொய்யாக இருப்பின், காவல்துறையின் உதவியுடன் அதை உடனே நிரூபித்துவிட முடியும். ஆனால், இரு அரசுகளும் மௌனம் காப்பதால், நடந்த கொடுமைகள் உறுதிப்பட்டுப் போகின்றன.

கட்டாய மதமாற்றம், ஹிந்து மதத்தை நிந்திப்பது என்பனவெல்லாம், மத மாற்ற குறிக்கோள் கொண்ட கிறிஸ்துவ அமைப்புகள் இழைக்கும் குற்றங்கள். இவை நிச்சயமாக கண்டனத்துக்குரியன; நிறுத்தப்படவும் வேண்டும். அதற்காகத்தான் சுவாமி லக்ஷ்மணானந்தா பாடுபட்டார். ஆனால், அவர் ஆக்கபூர்வமான பாதையைக் கடைப்பிடித்தார். அவரது மரணத்துக்குப் பிறகு வெறியாட்டம் போட்ட

மாறன் பிரதர்ஸ்

கா~~த~~லில் விழுந்தேன்

இந்த
டைட்டில்தான்
நல்லாருக்கு




சங் பரிவார் முரடர்களோ, வக்கிரமான பழிவாங்கலில் ஈடுபட்டுள்ளனர்.

இத்தகைய கொடுமைகள் உணர்ச்சிவசத்தினால் வெடிக்காத வண்ணம் மத்திய - மாநில அரசுகள் முன்யோசனையுடன் கிறிஸ்துவ அமைப்புகளுக்குப் பாதுகாப்பு அளித்திருக்க வேண்டும். அதில் தவறியதோடு, நல்லிணக்கக் கூட்டங்கள் நடத்தி, மக்களின் உணர்ச்சிகளைத் தணித்து, பயத்தைப் போக்கும் பொறுப்பிலும் தவறிவிட்டன.

ஒரிஸ்ஸா நிலைமை இவ்வாறு இருக்க, அனைத்து மதப் பிரதிநிதிகள் கூட்டத்தைக் கூட்டி, ''நான் மதச் சார்பற்றவன்'' என்று அத்வானி முழங்குவது அபத்தத்தின் உச்சம்!

''ஒரிஸ்ஸாவில் போதுமான அளவு மத்திய பாதுகாப்புப் படையினர் உள்ளனர்; தேவையானால், நக்ஸலைட் எதிர்ப்புப் படையினரையும் ஒரிஸ்ஸா அரசு மதக் கலவரங்களை எதிர்கொள்ளப் பயன்படுத்திக் கொள்ளட்டும்'' என்று மத்திய அரசு பொறுப்பைத் தட்டிக்கழிப்பது அலட்சியத்தின் உச்சம்!

கலவரம் வெடித்து ஐந்து வாரங்கள் ஆன பிறகு, ஒரிஸ்ஸா கந்தமால் மாவட்ட நிர்வாகம், முக்கி - முனகி ஒரு சர்வ மத அமைதிக் கூட்டத்தை நிகழ்த்தியிருப்பது தாமதத்தின் உச்சம்!

நெஞ்சைப் பிளக்கும் இந்தக் கொடுமைகள், அலட்சியப் போக்கு ஆகியவற்றினூடே, சற்றே ஆறுதலான விஷயம் கேரளத்தில் நிகழ்ந்துள்ளது. ஹிந்து - கிறிஸ்துவ மதத் தலைவர்கள் ஒன்றுகூடி, கட்டாய மதமாற்றத்தைக் கண்டனம் செய்ததுடன் மத நல்லிணக்கத்துக்கும் குரல் கொடுத்துள்ளனர். அத்வைதாசிரமத்து சுவாமி சிதானந்தபுரி என்பவரும் பேராயர் பஸிலியோஸ் கிலெமிஸ் என்பவரும் முன் நின்று நடத்திய இதைப் போன்ற அர்த்தமுள்ள கூட்டங்கள் நாடெங்கும் பரவலாக நடந்தால், வன்முறையும் வெறுப்பும் அவற்றின் விளைவான வக்கிரக் கெடுமைகளும் முடிவுக்கு வரும். ○

# சக்கரை கட்டி



மற்றுமொரு முக்கோணக் காதல் கதை. துள்ளல் + துடிப்பு கலந்து இளமையுடன் படத்தைக் கொடுத்திருக்கும் புதுமுக இயக்குநர் கலாபிரபு, அசத்தலான வெல்கம் டிக்கெட் வாங்கியிருக்கிறார்.

ஹீரோவாக சாந்தனு (பாக்யராஜ் மகன்). அப்பா போட்டு வைத்த பாதையில் பயணிக்காத புத்திசாலித்தனம் நடிப்பில் தெரிகிறது. மென்மையான ஆனால் வன்மையான காதல் கதையில் தனி மேனரிஸத்தோடு தனித்துவப்படுகிறார். வேதிகா, இஷிதா இருவரிடமும் மாட்டிக்கொண்டு காதல் தொல்லை அனுபவிக்கையில் நடிப்பில் பரிமளிக்கிறார்.

சாந்தனு - இஷிதாவின் காதல் கார்ப்பரேட் கட்டுச் சாதம். காஃபி ஷாப், டிஸ்கொத்தே என... காட்சி அமைப்பில் ரிச்சோ ரிச். படித்த பெண்ணான வேதிகா, அத்தை மகன் சாந்தனு மேல் காதல் கொண்டு அழுகாச்சி ஆட்டம் போடுவது ஹைதர் அலி காலத்து அரதப் பழசு.

சாந்தனு நண்பர்கள் கொடுக்கும் காதல், ஐடியாக்கள், ராக்கெட் ரேஞ்சுக்கு எகிறுமென எதிர்பார்க்க, புஸ்வாணமாகிப் போவது, காமெடி கவிதை. அதுவும் க்ளைமாக்ஸில் அவர்கள் போடும் காமரா திட்டம் சொதப்பலில், தியேட்டர் அதிர்கிறது.

ஏ.ஆர்.ரஹ்மானின் இசையில் 'மருதாணி, டாக்சி, டாக்சி' பாடல்... இனி இளசுகளின் இதய ரிங்டோன். ஆண்ட்ரு- இராசாமதியின் ஒளிப்பதிவு வெல்லக்கட்டி. முதல் படமே அதிரடி, ஆக்ஷன் என இறங்காமல், மென்மையான கதையில் உழைத்திருக்கும் இயக்கு நருக்கு, ஸ்பெஷல் பாராட்டுக்கள்.

கதையைப் போல திரைக் கதையில் கவனம் செலுத் தியிருந்தால், இன்னும் இனித்திருக்கும்.

*சர்க்கரை கட்டி - கசப்பு கலந்த இனிப்பு!*

**- கண்மணி**

# நடக்குமென்பார்; நடக்கும்!

05.10.2008 முதல்
11.10.2008 வரை

தஞ்சை பரத்வாஜ்



**மேஷம்:** பேச்சு வல்லமை கொண்ட மேஷ ராசிக்காரர்களே... வேலையில் மாற்றம் வரப்போகுது. வீட்டைக்கூட மாற்றப்போறீங்க. நண்பர்களைப் பிரியப் போறீங்க. காதல் கசக்கும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கடன் தொல்லைகள் கட்டுக்குள்ளே இருக்கும். ராகு / கேது / குரு வழிபாடு தீமையைக் குறைக்கும்.



**ரிஷப்ம்:** நட்புக்குப் பெயர் போன ரிஷப ராசிக்காரர்களே... உங்கள் 'வாக்கு' மேன்மையடையப் போகுது. புண்ணிய ஸ்தலம் சென்றுவரப் போறீங்க. திருமணப் பேச்சு கைகூடப் போகுது. புதிய தொழில் முயற்சியில இறங்கப் போறீங்க. சனி வழிபாடு செய்து வர நன்மை பெருகும்.



**மிதுனம்:** ஞானத்தில் சிறந்த மிதுன ராசிக்காரர்களே... வெளிநாடு போக அழைப்பு வரும். இல்லற வாழ்க்கையில அடிக்கடி சண்டை சச்சரவுங்க வரும். தேவையில்லாம வாக்குவாதம் செய்யாதீங்க. உடம்பைக் கொஞ்சம் கவனிச்சுக்குங்க. ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நன்மை உண்டாகும்.



**கடகம்:** தெளிந்த சிந்தனை கொண்ட கடக ராசிக்காரர்களே... மன உளைச்சல் தீரும். பணக்கஷ்டம் இருக்காது. குடும்பத்துல பிரச்னைகள் தீரும். உத்தியோகத்துல இடமாற்றம் உண்டு. வியாபாரத்துல நல்ல ஏற்றம் உண்டுங்க. ராகு/ கேது / குரு வழிபாடு நன்மையை அதிகமாக்கும்.



**சிம்மம்:** பொறுமை நிரம்பிய சிம்ம ராசிக்காரர்களே... சுபகாரியங்கள் நீங்கள் நினைத்தபடி நடக்கப்போகுது. பணக்கஷ்டம் இருக்காது. பாக்கிகள் வசூலாகும். உல்லாசப் பயணம் போவீங்க. உடல், மனம் நல்ல நிலையில் இருக்கும். சனி வழிபாடு இன்னும் நன்மையை அதிகப்படுத்தும்.



**கன்னி:** கஷ்டத்துக்குக் கலங்காத கன்னி ராசிக்காரர்களே... உங்களுக்கு இட மாற்றம் ஏற்படப் போகுது. வேலைப் பளு அதிகரிக்கும். அதே நேரத்துல பணக்கஷ்டம் இருக்காது. நண்பர் வழியில பெரிய நன்மையை அடைவீங்க. செலவுகளைக் கட்டுக்குள் வைத்துக்கொள்வது அவசியம். ராகு / கேது / சனி வழிபாடு நன்மையைத் தரும்.






**துலாம்:** பழகுவதற்கு இனிய துலாம் ராசிக்காரர்களே... வெளியூர் பயணம் போகப்போறீங்க. கணவன் - மனைவி உறவுகள் நல்ல நிலையில் இருக்கும். உத்தியோகத்தில் பதவி உயர்வு உண்டு. வியாபாரத்தில் சாதிப்பீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையை அதிகரிக்கும்.



**விருச்சிகம்:** திறமைக்குப் பெயர் போன விருச்சிக ராசிக்காரர்களே... இந்த வாரம் முழுதும் கோபம் இல்லாத மனிதராக இருக்கப் போறீங்க. புண்ணிய ஸ்தலம் போவீங்க. குடும்பத்துல இருந்த வாக்குவாதங்கள் குறையும். சுபகாரியங்கள் நடந்தேறுமுங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.



**தனுசு :** அன்புக்கு அடிமையான தனுசு ராசிக்காரர்களே... சுபகாரியங்கள் தடையில்லாம நடக்கப் போகுதுங்க. தொல்லை கொடுத்துக் கொண்டிருந்த கூட்டாளிங்க விலகி ஓடுவாங்க. வீடு, மனைங்க வாங்க நல்ல நேரம். யாரிடமும் வாக்குவாதம் செய்யாதீங்க. கல்வி ஞானத்துல பேர் வாங்குவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையை அதிகமாக்கும்.



**மகரம்:** தைரியமான மகர ராசிக்காரர்களே... உங்கள் மனக் குழப்பம் தீர்ந்துடுமுங்க. பணக்கஷ்டம் இருக்காது. எதிரிங்க தொல்லை தீருமுங்க. உங்க வார்த்தைக்குப் 'பவர்' கூடும். ஆபரணச் சேர்க்கை உண்டுங்க. ராகு / கேது / சனி வழிபாடு சங்கடங்களைத் தீர்க்கும்.



**கும்பம்:** போராட்டக் குணம் நிறைந்த கும்ப ராசிக்காரர்களே... வீடு / மனை வாங்க சூப்பரான நேரம். எதிரிகள் தொல்லை இனி இருக்காதுங்க. வியாபாரத்துல நல்ல லாபம் கொட்டும். தொழில இன்னும் விருத்தி பண்ணப் போறீங்க. குடும்பத்துல சுப காரியப் பேச்சு எழும். நீண்ட காலமாக இருந்து வந்த பிரச்னை முடிவுக்கு வரும்.



**மீனம் :** தளராத மனம் கொண்ட மீன ராசிக்காரர்களே... பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினை ஆகும். திடீர் பிரபலம் ஆவீங்க. உடல் ஆரோக்கியம் நல்லா இருக்கும். வியாபாரம் சூடுபிடிக்கும். கடன் தொல்லைகள் தீரும். தொலை தூரத்திலிருந்து நல்ல செய்தி வரும்.

# Prashanti யுடன் ஓர் இனிய தீபாவளி ப்ரத்யேகமாய் !!

# Prashanti-ன் மற்றுமோர் புதிய படைப்பு...



## ப்ரத்யேகம்

இந்த தீபாவளிக்கு ப்ரசாந்தியோட லேட்டஸ்ட் லவ்லி வருகைதான் "ப்ரத்யேகா கலெக்‌ஷன்ஸ்!" Special silk Cottons! பட்டோட விகிதம் அதிகங்கிறதால பளபளப்பும், மினுமினுப்பும் உள்ளத்தைக் கொள்ளையடிக்கும். வார்த்தையால வர்ணிக்க முடியாத அளவுக்கு பற்பல நூதன நிறங்களில் வித்தியாசமான பார்டர்களுடன் இருக்கும் "ப்ரத்யேகம்" புடவையை இந்த தீபாவளிக்குக் கட்டிக்கிட்டா மத்தாப்பூக்கு புடவை கட்டின மாதிரி அத்தனை அழகு!!



"ப்ரத்யேக ப்ரசாந்தியின் அழகோ அழகு"

## விவாஹம்

மாந்துளிர்ல அரக்கு பார்டர் போட்ட இந்த 9 கஜம் புடவையைக் கட்டிகிட்டு, நான் மத்தாப்பூ கொளுத்துற போஸ் எப்படி இருக்கு? இது ப்ரசாந்தியின் விவாஹம் கலெக்‌ஷன்ஸின் சிம்பிள் சாம்பிள்! மத்ததையெல்லாம் பாத்தா அப்படியே அசந்துடுவீங்க! இப்பல்லாம் கல்யாண கூறைப் புடவைக்குகூட ப்ரசாந்தியின் சில்க்காட்டன் பெஸ்ட் சாய்ஸ்னு ஆயிட்டதால கறுப்பு கலக்காமலும் போடறாங்க!! இதுல 6 கஜம் கலெக்‌ஷன்ஸ்ல கோத்து வாங்கினது, ஜரி புட்டா, ஜரி கட்டம், வைர ஊசி, டிஷ்யூ இப்படி ஏகப்பட்ட வெரைட்டி! 60% சில்க், 40% காட்டன்னு அளவா மிக்ஸ் பண்றதால அப்படி ஒரு ரிச் லுக்! விலை ரூ. 2500 முதல் 4000 வரை!



## ப்ரியம்

சில்க்காட்டனோ, பாலிகாட்டனோ ட்ரெண்டியா அசத்த ப்ரிண்டட் அண்ட் எம்ப்ராய்டரி - இதுவே **'ப்ரியம்'**. குந்தன் வேலைப்பாடு, ஆரி ஒர்க், Mirror Work எத்தனை விதம், ப்ளாக் ப்ரிண்டை மறக்கலாமா? கோல்ட் ப்ரிண்ட், கடிப்ரிண்ட், டபுள் கலர் ப்ரிண்ட்னு கொள்ளை அழகு போங்க!

# வைபோகம்



பார்ட்டியோ, சின்ன விழாவோ - ப்ரசாந்தியோட 'வைபோகம்' சாரில போனா, அதோட கெட்டப்பே தனிதான்! Pink & orange, Lavender & Royal blue, Pista & mustard, Ruby & majenta, Yellow & rust னு ஏகப்பட்ட டபுள் ஷேட்ஸ் - மனசை மயக்கும் விதத்தில் குவிஞ்சிருக்கு! அதுலயே மீனா ஒர்க், கம்ப்யூட்டர் டிஸைன், டிஷ்யூ பார்டர்னு வெரைட்டியா பார்டர், க்ருஷ்ணர், ரதம்னு ஸ்பெஷல் பல்லு! அப்புறமென்ன...

'வைபோகம்' கட்டினாலே என்றும் வைபோகம் தான்!! விலை ரூ. 1400/- முதல் ரூ. 2400/- வரை

# நித்யம்

நித்தம் உடுத்த பிரசாந்தியின் ப்ரத்யேக தயாரிப்பு இது! பாலிகாட்டில், லைட் வெயிட்டா, அழகு ப்ளவுஸோட அசத்தும். 'நித்யம்' புடவைகளுக்கு கஞ்சி வேண்டாம்! இதுல சல்வாரும் உண்டுங்கறதால இளம்பெண்களின் ஆல்டைம் சாய்ஸ் 'நித்யம்' தான். இதோட மங்களகிரி, கல்யாணிகாட்டன், கோட்டா, சந்தேரி, பாம்பே ஃபேன்ஸி ப்ரிண்டட் என ஆபிஸ் போற பெண்கள் விரும்பி அணியும் எல்லா நூதன ரகங்களும் கடலாக விரிந்துள்ளது. ரூ. 300/- முதல் ரூ. 1300/- வரை.

பெங்களூர் மல்லேஸ்வரத்தில் வெற்றி கொடி கட்டிக்கொண்டிருக்கும் 'ப்ரசாந்தி' Oct-10 முதல் 'ஜெயநகர்'-லும் ஆரம்பம்...

**PRASHANTI**

No. 16, 6th Cross Street, C.I.T. Colony, Mylapore, Chennai - 600004
Ph: 24991850, 24997636

**PRASHANTI**

No. 52, 4th Main Road,
17th Cross,
Malleswaram, Bangalore - 55
Ph: 2334 1632.

No. 2080, 38th Cross,
Eastend 'B' Main, 9th Block,
Jaya Nagar, Bangalore - 69
Cell: 98861 85951

# அன்றும் இன்றும் என்றும்

செல்வச் சிரஞ்சீவித் தம்பி சோணாசலத்துக்கு சர்வாபீஷ்டமும் சித்திக்கும்படியாக ஆசீர்வாதம். உனது அருமை மிக்க கடிதம் கிடைத்தது. உன்னுடைய சங்கடம் என்ன என்பதை அறிந்து கொண்டேன்.

சர்க்கார் பரீட்சைகளில் மாணாக்கர்கள் அரசியல் விஷயங்களைப் பற்றித் தாறுமாறான அபிப்பிராயத்தைத் தெரிவித்திருப்பதாகவும், இத்தகைய பதில்கள் அளிக்கும் மாணாக்கர்களின் பள்ளிக்கூடங்களுக்கு சர்க்கார் 'கிராண்'டில் மண் விழுந்து விடுமென்றும், கல்வி இலாகா டைரக்டர் சுற்றறிக்கை விட்டிருப்பது உண்மைதான். கல்வி மந்திரியும் சட்டசபையில் மேற்படி சுற்றறிக்கையை ஆதரித்துவிட்டார். 'அரசியல் சம்பந்தமான கேள்விகளைக் கேட்காமலேயே இருந்து விடலாமே?' என்று ஒரு மெம்பர் சொன்னதையும் அவர் ஒத்துக்கொள்ளவில்லை. ''கேள்வி கேட்கப்படும்; பதில்கள் அளித்துத்தான் தீர வேண்டும்'' என்று சொல்லிவிட்டார்.

ஆகையால் உனக்கும், உனக்குக் கல்வி அளிக்கும் பள்ளிக்கூடத்துக்கும் ஆபத்தைத் தேடிக்கொள்ளாதிருக்க விரும்பினாயானால், பரீட்சைகளில் அரசியல் சம்பந்தமான கேள்விகளுக்குத் தகுந்தபடி பதில் சொல்ல உனக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே, உனக்கும் உன்னைப் போன்ற மாணாக்கர்களுக்கும் உபயோகமாகும்படியாக எனக்குத் தெரிந்தவரையில் அரசியல் சம்பந்தமான சில உத்தேசக் கேள்விகளையும், பதில்களையும் இங்கே வெளியிடுகிறேன்.

**அரசியல் - பொது :**

**அரசாங்கம் என்றால் என்ன? அதன் பெருமை யாது?**

''ஒரு தேசத்தின் ஜனங்களிடம் அதிகமாகப் பணம் தங்கி, அதனால் அவர்கள் கெட்டுப்போகாமல் பார்த்துக் கொள்ளும் ஸ்தாபனத்துக்கு அரசாங்கம் என்று பெயர். திருடர்கள் என்ற ஒரு கூட்டத்தாரும் இதே காரியத்தைச் செய்து வருகிறார்கள். இவர்களுடைய போட்டியை அடியோடு ஒழித்து, தாங்களே ஏகபோகமாய் அவ்வுரிமையை அனுபவிப்பதுதான் அரசாங்கத்தின் பெருமை.''

**பிரஜைகள் என்றால் யார்? இவர்களு**



டைய இயல்பு என்ன?

''அரசாங்க வரி கொடுப்பதற்காக ஏற்பட்ட பிராணிகளுக்கு பிரஜைகள் என்று பெயர். தங்களுக்கு என்ன குறைகள் நேர்ந்தாலும் அவற்றுக்கெல்லாம் காரணம் அரசாங்கம்தான் என்று சொல்வது இவர்கள் வழக்கம். மொத்தத்தில், சுயபுத்தி இல்லாத வர்கள்.''

ஜனநாயகம் என்றால் என்ன?

''இது ஜனங்களைப் பீடிக்கும் ஒருவிதக் கொடிய வியாதி. ஸூயஸ் கால்வாய்க்கு மேற்கே உள்ள ஜனங்களுக்கு இந்த நோய் வந்தால் அதிகத் தீமை விளையாது. அதற்குக் கிழக்கே உள்ள நாடுகளில் முக்கியமாக, இந்திய தேசத்தில் உள்ள ஜனங்களுக்கு இந்த நோய் வந்துவிட்டால் பிழைப்பது அரிது. ஆகையால், அரசாங் கங்கள் இந்த விஷயத்தில் சர்வ ஜாக்கிரதை யுடன் இருக்கவேண்டும்.''

இந்திய அரசியல் :

இந்தியாவில் வாழும் ஜனங்களையும், அவர்களுடைய வாழ்வு முறையைப் பற்றியும் எழுதுக!

# அரசியல் பரீட்சை



''இந்தியாவின் ஜனங்கள் காட்டு மிராண்டிகளாகவும், நாகரிகமற்ற வர்களாகவும் வெகுகாலம் வாழ்ந்து வந்தனர். சென்ற 150 வருஷ கால மாக அவர்கள் நாகரிகமடையத் தொடங்கியிருக்கிறார்கள். இன்னும் ஆயிரம் வருஷங்களுக் குள் அவர்கள் ஒருவாறு நாகரிகம் அடைந்து விட லாம்.''

பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னால் இந்தியாவின் நிலைமை யையும், அதற்குப் பிறகு இந்தியாவின் நிலைமையையும் ஒப்பிடுக. முக்கியமான வித்தி யாசம் என்ன?

''பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னால் இந்தியாவில் திருடர் பயம் அதிகமாயிருந்தது. மராட்டியர்கள், தக்கர்கள், பிண்டாரிகள் முதலிய கொள்ளைக்கூட்டத்தார் ஜனங்களுடைய பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தார்கள். இப்போது அத்தகைய பயம் அறவே கிடையாது. ஏனெனில் ஜனங்களிடம் திருடுவதற்கோ, கொள்ளையடிப்பதற்கோ பணம் ஒன்றுமில்லை.''

**இந்திய சரித்திரத்தில் சில வீரர்களின் பெயர்களைக் குறிப்பிடுக!**

''அலெக்ஸாண்டர் கிளைவ், ஜெனரல் டையர்.''

**'நுண்ணிய காரியம் எண்ணித் துணிக' - இந்தியாவின் தற்கால அரசியலிலிருந்து உதாரணம் கூறி விளக்குக.**

''இராஜாங்கக் காரியங்களில் சின்ன விஷயமாயிற்றே என்று அலட்சியம் செய்துவிடக் கூடாது. தீர யோசித்தே செய்ய வேண்டும்.

உதாரணம் : அப்பா சாகிப் பட்டவர்த்தன் என்னும் அரசியல் கைதி சிறைக்கூடத்தில் கக்கூஸ் சுத்தம் செய்கிறேன் என்று சொன்னார். சுத்தம் செய்துவிட்டுப் போகட்டுமே என்று சூபரண்டெண்ட் விட்டுவிடவில்லை. முடியாது என்று சொல்லிவிட்டார். அந்தக் கைதி பிறகு அதற்காகப் பட்டினி கிடக்கலானார். இதை முன்னிட்டு மற்றொரு கைதியான காந்தியும் பட்டினி கிடக்க ஆரம்பித்தார். பிறகு சிறைச்சாலை இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல், கைதி காந்தியிடம் சென்று, அது விஷயம் யோசனை செய்யப்படுமென்றும் பட்டினியை நிறுத்தும்படியும் சொன்னார். காந்தியும், பட்டவர்த்தனரும் அப்படியே செய்தார்கள். இரண்டு மாத காலம் வரையில் சிறைக்கூடத் தலைவருக்கும், பம்பாய் அரசாங்கத்துக்கும், டில்லி அரசாங்கத்துக்கும், லண்டனுக்கும் கடிதங்களும் தந்திகளும் போய் வந்து கொண்டிருந்தன. இதற்குள் பட்டவர்த்தன் மறுபடியும் பட்டினி தொடங்கப் போவதாகப் பயமுறுத்தினார். கடைசியில், 1,729 கடிதங்களும், 397 தந்திகளும் போய் வந்த பிறகு, கைதி பட்டவர்த்தன் மற்ற வேலைகளுக்குக் குந்தகமில்லாமல் சிறைச்சாலை கக்கூஸ்களைக் கூட்டலாம் என்று

## தூறல் கவிதை

வானவில்லை மறைக்கும்
கட்டடங்களுக்கிடையே
நெருங்கும் வாகன நெரிசலில்
கைநீட்டிய குழந்தையின் சிரிப்பில்
தோன்றி மறைந்தது
ஒரு மின்னல் நேர வானவில்

எஸ்.ராஜகுமார்



அனுமதி பிறந்தது.

நீதி : அரசியலில் நுண்ணிய காரியமும் எண்ணித் துணிய வேண்டும்.''

**பின்வரும் விஷயங்களைக் குறித்து உனக்குத் தெரிந்தவைகளை எழுது : 1. இமயமலை, 2. மோர், 3. பட்டாசு.**

''1. இமயமலை இந்தியாவின் பாதுகாப்புக்குப் பெரிய தொரு அபாயமாயிருக்கிறது. இமயமலைக்கும் மகாத்மா காந்தி என்னும் இராஜாங்கப் புரட்சித் தலைவருக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. 'இந்தியாவில் பார்க்கத் தகுந்தவை இரண்டு. ஒன்று இமயமலை, இரண்டு மகாத்மா காந்தி' என்று வெளிநாட்டவர் கருதுகிறார்கள். மகாத்மா காந்தியும் அவர் செய்யும் தவறுகளையும்கூட 'இமாலயத் தவறுகள்' என்கிறார். 'இமயமலையை அசைக்க முடியாததுபோல் சத்தியத்தையும் அசைக்க முடியாது' என்கிறார்.

2. பாலைக் காய்ச்சி உறை குத்திப் புளித்தபின் கடைந்து வெண்ணெய் எடுத்த பிறகு, பாக்கி நிற்கும் திரவ பதார்த்தம்தான் மோர். இந்த மோரில் விட்டமின் என்னும் ஜீவசத்து இருப்பதாகவும், அதனால் தேகாரோக்யத்துக்கு இது மிகவும் நல்லது என்றும் இதுகாறும் சொல்லப்பட்டு வந்தது. ஆனால், இப்போது மோரில் விடமின் அல்லாது வேறொரு பயங்கரமான, கண்ணுக்குத் தெரியாத கிருமி இருப்பதாகவும், அது மனிதர்களுடைய இரத்தத்தில் இராஜத் துவேஷ உணர்ச்சியை ஊட்டுவதாகவும் தெரியவருகிறது. இதைக் கண்டுபிடித்தவர் சென்னை சர்க்காரின் லா மெம்பர் ஸர் கிருஷ்ணன் நாயர் அவர்கள். ஆகையால், பொதுவாக இந்திய தேசத்தி லும், முக்கியமாகப் பள்ளிக்கூடங்கள் கலாசாலைகளில் உள்ள ஹாஸ்டல்களிலும் மோரின் உபயோகத்தைக் குறைப்பதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

3. இதுகாறும் பட்டாசு என்பது தீபாவளியின்போது சிறுவர் சிறுமியர் வெடிக்கச் செய்து மகிழும் விளையாட்டுச் சாமானாக இருந்து வந்தது. சமீபத்தில் அது சென்னை சட்டசபையின் தீர வீர அங்கத்தினர்களைப் பயப்படுத்தி சிதறி ஓடச் செய்வதற்குக் காரணமாயிருந்தபடியால், பட்டாசுக் கட்டு இறக்குமதியைத் தடுத்துவிடுவது அவசியமாகும். அதனால், சர்க்காரின் இறக்குமதி வரியில் ஏற்படும் குறைவை, தீபாவளி வரி ஒன்று ஏற்படுத்தி வசூலித்து ஈடு செய்யலாம்.

**ஆனந்த விகடன் (1.4.1933)**

## தூறல் கவிதை

குடை பிடித்தபடி
மழையில் பள்ளிக்குச் சென்றாள்
டீச்சர் அம்மா.
அம்மா போனபிறகு
டீச்சர் விளையாட்டு
விளையாடத் தொடங்கியது
அவளின் குழந்தை.

எல்.ராஜ்குமார்





# பித்தன் என்றால் என்ன?

"பாரத ரத்னா சி.சுப்ரமணியமும், ம.ப.பெரியசாமித் தூரனும், சில நண்பர்களும் ஒரு பத்திரிகை தொடங்க நினைத்தார்கள். பத்திரிகையின் பெயர்: 'பித்தன்'. பெயரைப் பதிவு செய்ய வந்தபோது, அன்றைய ஆங்கிலேய அதிகாரி, "பித்தன் என்றால் என்ன?" என்று கேட்டாராம்.

"பித்தன் என்றால் வேறு ஒன்றுமில்லை. நாங்கள் வழிபடும் சிவபெருமான்!" என்று சாமர்த்திய மாகப் பதில் சொன்னாராம் தூரன். பித்தன் என்றால், வெறியன் என்றோ மனநிலை சரியில்லாதவன் என்றோ நினைத்துவிட இடம் கொடுக்காமல் அவர் சொன்ன பதிலை வைத்து, அனுமதி வழங்கினாராம் அந்த அதிகாரி!

"மகாகவி பாரதியாரின் கவிதைகள் பற்றி மட்டுமே பலரும் அறிந்திருந்த காலத்தில், அவருடைய கட்டுரைகள் பற்றியும் தமிழர்கள் அறிய, சுதேசமித்திரனில் அவர் எழுதிய சுமார் 1000 கட்டுரைகளை - அதாவது 5000 பக்கங்களை - தம் கைப்படப் பிரதி எடுத்து வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தவர் தூரன்" என்று புதிய தகவலை வெளியிட்டார் அவ்வை நடராசன்.

தூரன் குழந்தைகளுக்குக் கதை சொல்லும் பாணியைப் பாராட்டிப் பேசினார் 'பூவண்ணன்'.

திருப்பூர் கிருஷ்ணன், தூரனின் நாடகங்கள் பற்றியும், அவற்றில் தூக்கலாக இருக்கும் அவருடைய காந்தியச் சிந்தனைகள் பற்றியும் உதாரணங்களுடன் பேசினார்.

இசைப் பேரறிஞர் திருப்பாம்பரம் சண்முகசுந்தரம், கீர்த்தனைகளை இயற்றும் முன் தூரன் அவர்கள் எப்படி தேவார ஓதுவார்களையும், கர்நாடக இசைக் கலைஞர்களையும் அருகே வைத்துக் கொண்டு, இரு சாராரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் பாடல்கள் புனைந்தார் என்பதை எடுத்துக் கூறினார்.

சிற்பி பாலசுப்பிரமணியன் பேச்சு, தூரனின் கவிதைகள் குறித்து அமைந்திருந்தது.

அன்றைய கல்வி அமைச்சர் அவிநாசிலிங்கம் செட்டியாரின் தூண்டுதலால் தமிழ் வளர்ச்சிக் கழகம் அமைத்து, கலைக் களஞ்சியமும், சிறுவர் கலைக் களஞ்சியமும் உருவாக்கியவர் தூரன். 'பத்மபூஷன்' விருது வழங்கி மத்திய அரசு அவரை கௌரவித்தது.

தூரனின் நூற்றாண்டு விழா, கோவையிலும் சிறப்பாக நடைபெற்றது. சென்னையில் நடைபெற்ற நூற்றாண்டு விழாவை, தலைவராக இருந்து நடத்தினார் அருட்செல்வர் நா.மகாலிங்கம்.

மத்திய நிதியமைச்சர் ப.சிதம்பரம், "கலைக் களஞ்சியம் புதிய பதிப்பு வெளியிட அரசு உதவும்" என்று அறிவித்தார்.

தூரன் பாடல்களுக்கு இசையமைத்த டி.கே.கோவிந்தராவுக்கு, மியூசிக் அகடமி தலைவர் 'ஹிந்து' முரளி 'இசைக்கலை வாரிதி' விருது வழங்கி கௌரவித்தார்.

**- சாருகேசி**

# பொய் சொல்லப் போறோம்



பாலிவுட்டிலிருந்து கோலிவுட்டுக்கு வந்த மொழி பெயர்ப்பு காமெடி கலாட்டா இது. ஒளிவட்டத்துக்கும் (நன்மைக்கும்) வாலும் கொம்பும் முளைச்ச சாத்தான் புத்திக்கும் (தீமைக்கும்) இடையேயான யுத்தம்தான் கதை.

'எதிராளி குடியை உறவாடிக் கெடு'ங்கிற மாதிரி ஏமாத்தி பழிவாங்கும் யுக்திதான் திரைக்கதை. யூத்துக்கான கருவிங்க - 'பொய்யும் புளுகும்'தான். காணி நிலம் கேட்ட பாரதி மாதிரி நெடுமுடி வேணு ஒரு ஃபிளாட் வாங்க; கையிலிருந்து 'லபக்'ன்னு புடுங்கிட்டு போற காக்கா மாதிரி தாதா நாசர் அபகரிக்க; மிரட்சியும் இயலாமையும் புடைசூழ அழும் குழந்தையாய் நெடுமுடி வேணு. பொய்ய வெச்சு ஃபிளாட்ட மீட்கற ரியல் எஸ்டேட் ஸாரி ரீல் எஸ்டேட் கதை. லாஜிக்கான ஜோக்குகளை விதை மாதிரி ஃபிலிம் வயல்ல தூவ, பாதி முளைச்சு நம்மள சிரிக்க வைக்கிறது. கேமராமேன் அரவிந்த் கிருஷ்ணா சிறப்புப் பரிசை சுருட்டிக்கிட்டுப் போறாரு. அப்பாடா... கார்த்திக்கு நடிக்க வந்திடுச்சு. ஹீரோயின் பியாவின் அழகு ஆறுதல் பரிசு. பன்ச் டயலாக், ஆக்ஷன் அலர்ஜி, காதுல பூந்தோட்டம் வெக்கிற சாதுர்யம் - இதெல்லாம் இல்லாம படம் எடுக்கத் தெரியும்னு நிரூபிச்ச இயக்குநர் 'கீரிடம்' விஜய், சபாஷ் தட்டிக்கிட்டுப் போறாரு. வசனத்தில ஜவ்வு மிட்டாய கலக்காம இருந்தா இன்னும் நல்லா இருந்திருக்கும்.

ஆக மொத்தம்: **நாடக வாசனை வீசும் சிரிப்பு சினிமா.**

**– சினிமானந்தா**

# வாடகைத் தாய் வரமா...



ஓர் இந்தியப் பெண்ணை, வாடகைத் தாயாக இருந்து, தங்களுக்காக ஒரு குழந்தையைப் பெற்றுத்தர ஒப்பந்தம் செய்தார்கள் ஒரு ஜப்பான் நாட்டுத் தம்பதி. ஆனால் குழந்தை பிறப்பதற்கு முன்பாகவே, அந்த ஜப்பானியத் தம்பதி பிரிந்துவிட்டனர். ஜெய்ப்பூர் மருத்துவமனையில், அந்தக் கர்ப்பிணி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தபோது, 'அந்தக் குழந்தைக்கும் எனக்கும் எந்த ரத்தச் சம்பந்தமும் இல்லை. நாங்கள் பிரிந்துவிட்ட நிலையில், அந்தக் குழந்தை எனக்கு வேண்டாம்' என்று சொல்லிவிட்டார் அந்த ஜப்பானியப் பெண்மணி. அவரது முன்னாள் கணவர் குழந்தையை வளர்க்கத் தயாராயிருந்தபோதிலும், இந்தியச் சட்டம், ஒரு தனி ஆண், பெண் குழந்தையைத் தத்தெடுத்து வளர்ப்பதற்கு அனுமதிக்கவில்லை. அந்த விஷயம் கோர்ட்டுக்குப் போக, நீதிபதி உத்தரவின் பேரில், குழந்தை, தந்தைவழிப் பாட்டியின் பொறுப்பில் தற்போது இருக்கிறது.

"வாடகைத் தாய்க்குப் பிறக்கும் குழந்தை, அவரின் குழந்தையாகவே சட்டப்படி பதிவு செய்ய வேண்டும். மரபணு ரீதியான பெற்றோர், குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்ளலாம்!"

இன்டர்நெட்டில், 'வாடகைத் தாய் தேவை' என்று கோரும் அயல்நாட்டுத் தம்பதிகளும், 'வாடகைத் தாயாக இருந்து குழந்தை பெற்றுக்கொடுக்கத் தயார்' என்று அறிவிக்கும் பெண்களும் ஏராளமாக இருக்கின்றனர். இவை தவிர ஏஜென்சிகளும், 'மெடிக்கல் டூரிஸம்' என்ற பெயரில் இந்திய மருத்துவமனைகளும், மகப்பேறின்மை சிகிச்சை மையங்களும் அயல் நாட்டுத் தம்பதிகளை இழுக்கின்றன. அதற்கு மேற்கத்திய நாடுகளை விட, இந்தியாவில் மருத்துவச் செலவு குறைவு என்பது மட்டுமின்றி, மிகவும் குறைந்த செலவில் வாடகைத் தாய்கள் கிடைப்பதும் முக்கியக் காரணமாகும்.

''வாடகைத் தாய் என்பது ஒரு வக்கிரத் தொழில்'' என்கிறார் மார்க்சிஸ்ட் கட்சியின் தேசியச் செயலாளர் டபுள்யூ.ஆர். வரதராஜன். ''சமீபகாலமாக, கருப்பை குறைபாட்டால் வாடகைத் தாயை நாடுவது போய், பேறுகால சிரமங்களைத் தவிர்ப்பதற்காகவும் இது நிகழ்கிறது. பிறக்கும் குழந்தை வாடகைத் தாயின் குழந்தையாகவே சட்டப்படி பதிவு செய்யப்பட வேண்டும். மரபணுரீதியான பெற்றோர்கள் அந்தக் குழந்தையைத் தத்தெடுத்

துக் கொள்ளலாம். இதுவே நியாயம். ஏனெனில், வாடகைத் தாய், உணர்ச்சி பூர்வமான நெருக்கம் காரணமாகக் குழந் தையைப் பிரிய மறுக்கலாம்; கட்டாய மாகப் பிரிக்கிறபோது, அது அவளை உள வியல்ரீதியாகப் பாதிக்கக்கூடும். இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகமும், தேசிய மகளிர் ஆணையமும், இது விஷயமாக



# சாபமா..?

பல ஆலோசனைகளைக் கூறி இருக்கின் றன. அவற்றைப் பரிசீலிக்க வேண்டியது அரசின் கடமை'' என்கிறார்.

''குழந்தை இல்லாத தம்பதிகளுக்கு, வாடகைத்தாய் தேவைப்படும் பட்சத்தில், அதற்கான பெண்மணியை ஏற்பாடு செய் யும் வேலையை நாங்கள் ஏற்றுக் கொள்வ தில்லை. அது சம்பந்தப்பட்டவர்களின் பொறுப்பு'' என்று மருத்துவத்தையும் மனித உணர்வையும் நேர்க்கோட்டால் வகுக்கிறார் டாக்டர் ப்ரியா செல்வராஜ். ''அவர்கள் அழைத்து வருகிற பெண்மணி, ஒரு குழந்தையைப் பெற்றுத் தருவதற்குத் தகுதியானவர்தானா என்பதை மருத்துவப் பரிசோதனையின் மூலம் உறுதி செய் கிறோம். வாடகைத் தாயாக இருப்பதற்கு எவ்வளவு பணம் தருவது என்பதையும் சம்பந்தப்பட்டவர்களே எழுத்துபூர்வமாக ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும். அந்த ஒப்பந்தத்தின் பிரதி நாங்களும் வாங்கி வைத்துக் கொள்கிறோம்'' என் கிறார் ஜீஜீ மருத்துவமனையின் டாக்டர் ப்ரியா செல்வராஜ்.

''அது மட்டுமில்லை. இன்னொரு ஒப்



* லட்சுமி ராஜாராம்



* டபுள்யூ.ஆர். வரதராஜன்

பந்தத்தில் சம்பந்தப்பட்ட தம்பதி மற்றும் வாடகைத் தாய் ஆகியோரை இணைந்து கையெழுத்திடச் செய்கிறோம். அதில் சிகிச்சை குறித்த முக்கிய விவரங்கள்; யார் என்னென்ன செய்ய வேண்டும்; என்னென்ன செய்யக்கூடாது என்பவை இடம் பெற்றிருக்கும். ஒரு பெண் தனது கணவர் அல்லது கார்டியனின் சம்மதத்துடன் வாடகைத் தாயாக இருக்க அனுமதிக்கப்படுவார். அந்த ஒப்பந்தத்திலேயே, குழந்தை பிறக்கும்போது, தம்பதிகள் சட்டபூர்வமாகப் பிரிந்து விட்டாலோ அல்லது ஒருவர் மரணம் அடைய நேரிட்டாலோ, குழந்தையை வளர்க்கும் பொறுப்பு யாருக்கு என்பது கூட தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கும்'' என்கிறார்.

பொதுவாக, ஏற்கெனவே பிரசவித்த பெண்கள்தான் இந்தப் பணிக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். வசதி இல்லாத பெண்கள்தான் பெரும்பாலும் வாடகைத் தாய்கள். இதன் மூலம் கிடைக்கும் பணம் குழந்தைகளின் படிப்பு, நல்ல எதிர்காலம், கணவரது பிசினஸ் போன்றவற்றுக்கு உதவியாக இருக்கும் என்பதால்தான் பெண்கள் இந்தத் 'தொழிலை' ஒப்புக் கொள்கிறார்கள்!

''தங்களுக்காகக் குழந்தையைச் சுமக்கும் பெண் மீது, தம்பதிகள் அன்பு காட்டி கவனித்துக் கொள்வார்கள். வாடகைத் தாயின் டெலிவரி முடிந்த பிறகு தாயையும், குழந்தையையும் பிரித்து, வளர்ப்புத் தாயுடன் சேர்த்து விடுவோம். பெற்ற குழந்தையைப் பிரிவது எமோஷனலான விஷயம். எனவே, ஆரம்பம் முதலே கவுன்செலிங் அளித்து எந்தச் சிக்கலும் இல்லாமல், குழந்தை கைமாற்றம் நிகழ்கிறது'' என்கிறார் டாக்டர் ப்ரியா செல்வராஜ்.



* ப்ரியா செல்வராஜ்

சட்டம் என்ன சொல்கிறது? ''இந்தியாவில் வாடகைத் தாய் குறித்த சட்டம் எதுவுமில்லை. அயல்நாட்டவர்கள், இந்தியப் பெண்களின் கருப்பை மூலம் பெறும் குழந்தைகளைத் தத்தெடுத்துக் கொண்டு, தங்கள் நாட்டுக்கு எடுத்துச் செல்வது நடைமுறையில் இருக்கிறது. எழுத்துபூர்வமாக ஒப்பந்தம் செய்துகொண்டாலும்கூட, வாடகைத் தாய் 'குழந்தையைக் கொடுக்க மாட்டேன்' என்று சொன்னால் கோர்ட் அதனை எப்படி அணுகும் என்பது தெரியவில்லை'' என்கிறார் வழக்கறிஞர் கீதா ராமசேஷன்.

வளர்ப்புத் தாய் :

"எங்களுக்குத் திருமணமாகி ஆறு வருடங்கள் ஆகின்றன. இத்தனை காலமும் ஒரு குழந்தையைப் பெற்றுக்கொள்ள எவ்வளவோ சிகிச்சைகள் செய்தாச்சு. பலனில்லை. கடைசியில் வாடகைத் தாய்தான் ஒரே வழி என்று டாக்டர் சொல்லிவிட்டார். ஓர் உறவுக்காரப் பெண்மணிதான், வாடகைத் தாயாக இருக்க சம்மதித்த பெண்ணை ஏற்பாடு செய்தார். முறையான பரிசோதனைகள் மூலமாக அவரை ஓ.கே. செய்தார் டாக்டர். தொடர்ந்து அனைத்துவிதமான ஃபார்மாலிடிகளும் செய்து முடிக்கப்பட்டன.

இப்போது எங்கள் குழந்தை அவரது வயிற்றில் வளர்ந்து கொண்டிருக்கிறது. வரும் டிசம்பரில் டெலிவரி ஆகிவிடும். ஆஸ்பத்திரியில் இருக்கும் அவர், "உங்க குழந்தை வயிற்றில் நகருது; உதைக்குது" என்று சொல்லி, என் கையை அவரது வயிற்றின் மீது வைத்துக் காட்டுவார். எனக்குள் இனம்புரியாத ஒரு சந்தோஷம் ஏற்படும். மருத்துவச் செலவு, வாடகைத் தாய்க்கான பணம் எல்லாம் சேர்த்து சுமார் இரண்டரை லட்சம் ஆகிவிட்டது."

வாடகைத்தாய்:

"கேரளாவைச் சேர்ந்த நான் கணவனை இழந்தவள். என் குழந்தைகளை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும்; அவர்களுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் வாடகைத் தாயாக இருக்கச் சம்மதித்தேன். டாக்டர் ஓ.கே. சொன்னபின், குழந்தை தேவைப்படும் தம்பதியின் கரு என் கருப்பைக்குள் வைக்கப்பட்டது. அந்தக் கணம் முதல், 'நல்லபடியாக இந்தக் குழந்தையைப் பெற்று அவர்களிடம் ஒப்படைக்க வேண்டுமே' என்ற பொறுப்புணர்வு வந்து விட்டது. என் வயிற்றுக்குள் வளரும் குழந்தையின் அசைவுகளை நான் அனுபவிக்கும்போதும் அதை வளர்ப்புத் தாயுடன் நான் பகிர்ந்து கொள்ளும்போதும், எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்படும். பணத்துக்காகத்தான் நான் இதைச் செய்ய முன்வந்திருக்கிறேன் என்றாலும், இன்னொரு பெண்ணுக்கு உதவிய திருப்தியும் கிடைப்பதை மறுக்க முடியாது. குழந்தையைப் பெற்று அவர்கள் கையில் ஒப்படைப்பதுடன் என் கடமை முடிந்துவிடும்.

அமெரிக்காவின் சில மாநிலங்களில் வாடகைத் தாய்க்கு, தான் பெற்றுக் கொடுத்த குழந்தையைச் சென்று பார்க்கும் உரிமை உண்டு. வர்த்தகரீதியிலான வாடகைத் தாய் ஒப்பந்தங்கள் கனடா, பிரான்ஸ், ஜப்பான், பிரிட்டன் போன்ற நாடுகளில் தடைசெய்யப்பட்டுள்ளன. நெதர்லாந்து, பெல்ஜியம் போன்ற சில நாடுகளில் வாடகைத் தாய்களுக்குச் சட்டபூர்வமான அனுமதி உண்டு.

"மருத்துவத்துறையில் முன்னேற்றம் என்பதெல்லாம் சரிதான்! ஆனால், நம் நாட்டில் ஏராளமான தொட்டில் குழந்தைகளும், ஆதரவற்ற குழந்தைகளும் இருக்கின்றன. சட்டமும் தத்தெடுத்துக்கொள்ள அனுமதிக்கிறது. எனவே, லட்சக்கணக்கில் பணம் செலவழித்து, ஏழைப் பெண்களை இப்படி சுயநலமாகப் பயன்படுத்திக் கொள்வதற்குப் பதிலாக ஆதரவற்ற சிசுக்களைத் தத்தெடுத்துக் கொள்ளலாமே! இதனால் குழந்தை இல்லாத தம்பதிகளுக்கு அன்பு காட்ட குழந்தை கிடைக்கிறது; ஆதரவற்ற சிசுவுக்கு, அதைப் பாசத்துடன் வளர்க்க பெற்றோரும் கிடைக்கிறார்கள்!" என்கிறார் சிவானந்தா ஆசிரமத்தின் லட்சுமி ராஜாராம். அட! இது நல்லா இருக்கே!

**- எஸ். சந்திரமௌலி**


11
சிவபெருமான் வில்லேந்தி நின்ற கோலத்தில் திரிபுராந்தகர் என்ற பெயருடன் விளங்குகிறார்!
மகாபாரதத்தில் வரும் இந்த வேட்டுவக் கோலத்துக்கு கிராத மூர்த்தி என்றும் பெயர்!

# வில்லேந்திய

அழகின் வடிவே... அருளின் வடிவே... த.கி.நீலகண்டன்

மான், மழு, சூலம், உடுக்கை இவற்றை ஏந்திய கோலத்தையே பெரும்பாலான சிவவடிவங்களில் பார்த்திருக்கிறோம். பெருமான் வில்லும் அம்பும் ஏந்திய கோலத்தை பலர் இராமபிரானாக நினைத்துக் கொண்டுவிடுவார்கள். சிவபெருமான் வில்லேந்தி நின்ற கோலத்தில் 'திரிபுராந்தகர்' என்ற பெயருடன் விளங்குகிறார். மகாபாரத நிகழ்ச்சி ஒன்றில், சிவனிடம் பாசுபதாஸ்திரம் பெற வேண்டி, அர்ச்சுனன் தவம்புரிந்தபோது, ஒரு வேடன் வடிவில் தோன்றி அவனுடன் சிவபெருமான் போரிட்டு, பின்னர் அவன் வீரத்தையும் தவத்தையும் மெச்சி பாசுபதாஸ்திரம் அருளியதாகக் கதை உண்டு. இந்த வேட்டுவக் கோலத்தை ''கிராதமூர்த்தி'' என்கிற அழகிய சிலை வடிவாக வடித்து வைத்திருக்கிறார்கள். இந்தக் கோலத்திலும் வில்லும் அம்பும் ஏந்தியிருக்கிறார் பெருமான்.

கும்பகோணத்தின் தலபுராணத்தோடு தொடர்புடையதாகவும் ஒரு வேடுவக் கோலம் விளங்குகிறது. பேரூழிக் காலத்தில் இந்த உலகத்து உயிர்களின் பீஜங்களை எல்லாம் ஒரு மண் கலசத்தில் இட்டு, அவை அழியாமல் இருக்க அமுதத்தால் அந்தக் கலசத்தை நிரப்பி பிரளய வெள்ளத்தில் விட்டுவிட, இது பூமியில் ஓர் இடத்தில் ஒதுங்கியதாம். சிவபெருமான் ஒரு வேட வடிவம் கொண்டு, வில்லும் அம்பும் தாங்கிவந்து, வில்லில் அம்பு பூட்டி அந்தக் கலசத்தைக் குறிவைத்து அடிக்க, கலசம் உடைந்து அதிலிருந்து தெறித்த பீஜங்களில் இருந்து உயிர்க்குலம் மீண்டும் தழைத்ததாகக் குடந்தைப் புராணம் தெரிவிக்கிறது. உடைந்த அமுத கும்பமே கும்பேசுவரர் என்கிற லிங்கத் திருமேனியாக கும்பகோணத்தில் இன்றும் விளங்கி வருகிறது. குடந்தையில் சிவபெருமான் வில்லேந்தி நிற்கும் வடிவம் ஒன்றும் இருக்கிறது.

ஆனால் வில்லேந்திய வடிவத்தில் மிகப் பிரபலமாகப் பேசப்பட்டது திரிபுராந்தகர் வடிவமே! சிவபெருமான் புரிந்த லீலைகளில் விசேஷமானது திரிபுர சம்ஹாரம். வேதங்கள், சங்க இலக்கியங்கள், தேவார, திருவாசகங்களில் இந்த நிகழ்ச்சி பற்றி நிறைய செய்திகள், பதிகங்கள் உண்டு.

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி ஆகிய மூன்று அசுரர்கள் கடுந்தவம் செய்து பிரம்மதேவனிடம் அளவில்லாத வரங்களைப் பெற்றார்களாம். அவர்கள் தங்களுக்கென்று பொன், வெள்ளி, இரும்பு இவற்றால் ஆன கோட்டைகளை உருவாக்கிக் கொண்டு வாழ்ந்தார்கள். இந்த மூன்று கோட்டைகளின் விசேஷம் என்னவென்றால் அவை இறக்கைகளுடன் இங்கும் அங்கும் பறந்து செல்லுமாம். இதனால் விண்ணில் இருந்த உயிர்க்குலங்கள் வேதனையுற்று அவதிப்பட்டன. இவர்களை அழிக்க சிவபெருமானைத் தவிர வேறு யாருக்கும் சக்தி இல்லை. எனவே தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, சிவபெருமான் திரிபுரங்களை அழிக்கப் புறப்பட்டார். பெருமான் உகந்து ஏற, தேவதச்சன் ஒரு ஒப்பற்ற தேரைத் தயார் செய்தான். பதினாலு உலகங்களும் அந்தத் தேரின் அடுக்குகளாக அமைந்தனவாம். சூரியனும் சந்திரனும் தேரின் சக்கரங்களாக ஆனார்கள். வேதங்களைக் குதிரைகளாகப்

விமலன்!

பூட்டி, பிரணவமான ஓம் என்னும் மந்திரத்தையே சாட்டையாகக் கொண்டு, பிரம்மதேவனே தேர் ஓட்டும் சாரதியாக அமர்ந்தானாம். மேருமலையை வில்லாக்கி, வாசுகி என்ற பாம்பை நாணாக்கி, அக்னி, வாயு, மகாவிஷ்ணு ஆகிய மூவரும் அம்பு உருக்கொள்ள, எல்லாத் தேவர்களும் தத்தம் சக்தியை பெருமானுக்கு சமர்ப்பணம் செய்ய, திரிபுர மாகிய மூன்று கோட்டைகளில் இருந்த அசுரர்களை அழிக்கப் புறப்பட்டானாம் பெருமான். இதில் தம் பங்கே அதிகம் என்று ஒவ்வொருவரும் கர்வம் கொள்ள, அவர்கள் அகந்தையை எண்ணி பெருமான் சிறு நகை செய்தானாம். அவ்வளவுதான், வேறு ஆயுதம் எதுவும் துணையின்றி, பெருமானுடைய சிரிப்பு ஒன்றே பெருநெருப்பாகி, மூன்று கோட்டைகளையும் எரித்துச் சாம்பலாக்கியதாம்!

**வெற்றியின் பெருமிதம் சிவபெருமான் முகத்தில் தவழும் புன்னகையில் தெரிகிறது!**



இந்தப் புராண வரலாறு நிகழ்ந்த தலம் கடலூருக்கு அருகில் உள்ள திருவதிகை. சிவபெருமான் புரிந்த எட்டு வீரச் செயல்கள் நிகழ்ந்த இடங்கள் அஷ்ட வீரட்டத் தலங்கள். இதில் திருவதிகையும் ஒன்று. இத்தலத்தில் பெருமானின் வில்லேந்திய கோலம் கண்ணைக் கவரும் வகையில் அமைந்துள்ளது. நான்கு திருக்கரங்கள். மேல் இரண்டு கரங்களில் வழக்கம் போல் மானும் மழுவும். கீழ் இரண்டு கரங்களில் வலது கையில் அம்பும், இடது கையில் வில்லும் ஏந்தி, கம்பீரமாகக் காட்சி அளிக்கிறான் பெருமான். விரிந்த மார்பும், நிமிர்ந்த முகமும், திரண்ட புஜங்களுமாக, வீரக்கோலம் காட்டுகிறான் பெருமான்.

அழகான ஜடாமகுடம்; அதில் விதவிதமான அணி வகைகள். கழுத்திலும், தோள்களிலும், மார்பிலும், இடையிலும் பலவிதமான ஆபரணங்கள், காலில் வீரக்கழல்கள், கைகளில் கங்கணங்கள், முழந்தாளில் வீரகண்டாமணி, இடையில் இறுக்கிக் கட்டிய கச்சம் என்று சர்வாலங்காரனாய் காட்சி தருகிறான் எம்பெருமான். வெற்றியின் பெருமிதம் அவன் முகத்தில் தவழும் புன்னகையில் தெரிகிறது. ஆனால் ஜாக்கிரதை! அவன் சிரிப்பில் நெருப்பும் உண்டு என்று நமக்கு அறிவுறுத்துகிறது புராணம்.

இதை அழகான சிலேடை வெண்பாவாகப் பாடிவைத்திருக்கிறார்கள் இரட்டைப் புலவர்கள்.

''நைந்து போன நாண்! இறுகிப் போன வில்! செல்லரித்த அம்பு! நீ திரிபுரம் எரிக்கச் சென்ற கதை சிரிப்புக்கு இடமாகி விட்டதே!'' என்று எள்ளி நகையாடுகிறது ஒரு வகையில்,.

''நஞ்சுள்ள பாம்பே நாண்! மேரு மலையே வில்! மண்ணைத் தின்ற திருமாலே அம்பு! ஆனால், நீ திரிபுரம் எரித்தது உன் சிரிப்பால் அல்லவா!'' என்று புகழ்கிறது இன்னொரு வகையில்.

**(பெருகும்)**



# சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது



1304 பக்கங்களில் வியாச பாரதத்தின் சுருக்கம். 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள். பலரும் கேட்டிராத நுணுக்கமான தகவல்கள். பீஷ்மர் அருளிய பல உபயோகமான தகவல்கள். இவற்றுடன் முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும், இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

**இரண்டு பாகங்கள் ரூ. 600/- 9 வருடங்களில் 9 பதிப்புகள்**

## வால்மீகி ராமாயணம்



வால்மீகி ராமாயணத்தை சுருக்கமாகவும், எளிமையாகவும் எழுதியுள்ளார். முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் – கம்ப ராமாயணம் மற்றும் துளசி ராமாயணங்களுக்கிடையே உள்ள வேறுபாட்டையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

**இரண்டு பாகங்கள் ரூ.600/-**

## ஹிந்து மஹா சமுத்திரம்



யுகங்களின் கணக்கு, யாகங்கள், தெய்வங்கள், உருவங்கள், மரணத்திற்குப் பின்..., போக வாசிஷ்டம், ஷடங்கங்கள், சட்ட தத்துவங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், நாரதர் பெற்ற உபதேசங்கள் – இப்படி ஏராளமான இந்து சமயத் தகவல்கள்.

**பாகம் - 1 ரூ.200/- பாகம் - 2 ரூ.225/- பாகம்-3 ரூ. 175/-**



நடிகர் சிவகுமார் தமிழகத்தின் சமூக, கலாச்சார, வரலாற்றுப் பதிவுகளைத் தன் டைரியிலிருந்து வழங்கியுள்ளார்.

**விலை ரூ.300/-**

## டைரி 1946-1975



## இப்படிக்கு சூர்யா

நடிகர் சூர்யா

**விலை ரூ.250/-**

## இது ராஜபாட்டை அல்ல...

சிவகுமார்

**விலை ரூ.220/-**





**எஸ். குருமூர்த்தி** எழுதிய

## தண்ணீர் விட்டோ வளர்த்தோம்

அரசியல், ஆன்மிகம், கலாச்சாரம், தொழில் முன்னேற்றம், மத நம்பிக்கை, மதப் பிரச்சினை, ஹிந்து மதத் தத்துவங்கள், ஜனநாயக தத்துவம், அரசியல்வாதிகள்.... இப்படி ஏராளமான விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன.

(3 - பாகங்கள் - விலை ரூ.525/-)




(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(பு.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர் - 600 004
தொலைபேசி: 24641314 www.alliancebook.com
email: srinivasan@alliancebook.com

''சார், கிண்டலுக்காகச் சொல்லலை. எங்க பரம்பரைத் தொழிலே சுண்டல் விக்கறதுதான். எனக்கு மட்டுமில்ல, எங்க ஊர்ல இருக்கற ஐம்பது குடும்பங்களுக்கு குடிசைத் தொழில் இதுதான்'' சற்று சீரியஸாகப் பேசுகிறார் பண்ருட்டி சீரங்குப்பத்து அஞ்சலை.




# சுண்டல்

''காலம்பற ஆறு மணிக்கே சுண்டக் கடலைய ஊற வைக்கிறது, வேகவைக்கிறதுன்னு என்னோட வேலை ஆரம்பிச்சுடும். மதியம் பன்னெண்டு ஒரு மணியப் போல கஞ்சி குடிச்சிட்டு, சுண்டல் கூடையை தலையில தூக்கிட்டு ஊர்ஊரா சுத்த ஆரம்பிச்சுடுவேன். சுண்டல் விக்கறதுக்குன்னே ஒரு நாளைக்கு பதினைஞ்சு கிலோ மீட்டர் நடக்கறேன். இந்த வயசுலயும் இப்படி நடக்கவும்தான் எனக்கு சீக்குப் பிணி ஏதும் வரலைன்னு நெனைக்கிறேன். என்னோட புருஷன் இறந்து பத்து வருஷத்துக்குப் பிறகும் எனக்குக் கஞ்சி ஊத்தறது சுண்டல்தான்'' என்கிறார் அஞ்சலை.

சீரங்குப்பத்தில் மட்டும் இப்ப ஐம்பது குடும்பங்களில் நூறு பேர் சுண்டல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். வீட்டில் பெண்களுக்கு அதிகாலை முதல் மதியம் வரை சுண்டல் தயாரிக்கும் வேலைதான். மதியத்துக்கு மேல் அந்தந்த வீட்டு ஆண்கள், சுண்டல் பெட்டியைத் தூக்கிக்கொண்டு பக்கத்திலிருக்கும் நகரங்களுக்குப் போனால், வீடு திரும்ப நள்ளிரவு ஆகிவிடுகிறது. ஏதாவது அரசியல் கட்சி மாநாடெனில் அங்கே பந்தல்போடத் துவங்கும்போதே, அருகிலே சீரங்குப்பம் சுண்டல் வியாபாரிகள் கொட்டகை போடத் தொடங்கிவிடுகின்றனர்.

''வெறும் சுண்டக் கடலைய மட்டும் அவிச்சு வித்தா, எங்க ஊரு சுண்டலுக்கு இத்தினி ஃபேமஸ் வந்திருக்காது. அதுல சேர்க்கிற சாமான்களுக்குத் தனிப் பட்டியலே போட வேணும். தேங்காய்த் துருவல், மாங்காய்க் கீறல், இஞ்சித் துண்டு,



# கிராமம்!

கொஞ்சமா பூண்டுக் கீறல், கடுகு, மிளகு, சீரகம், கேரட் துண்டுகளோடு கொத்துமல்லி, புதினா இவற்றோடு கறிவேப்பிலையைப் போட்டுத் தாளிச்சு எறக்கிட்டா, சீரங்குப்பம் சுண்டல் முன்னால வேறெந்த சுண்டலும் நிக்க முடியாது! அந்த மணத்துலதான் எங்க காலம் ஓடிக்கிட்டிருக்கு!'' என்கிறார் கந்தசாமி.

''கவர்மென்ட் ஆபீசுங்க எங்களோட முதல் குறி. அப்புறமா தெருக்கள்ல வீடுகள்ல விப்போம். ரெண்டாயிரத்து ஐந்நூறு ரூபா முதல் போட்டால் போதும். ரெண்டு வீட்டுக்கு வேலை கிடைக்குது!'' என்கிறார் சின்னதுரை.

''லாரியில கிளீனரா ஓடிட்டு இருந்தேன். நமக்கு அது சரியா வரலை. பன்னெண்டு வருசமா சுண்டல் வித்துட்டு வர்றேன். வெள்ளைப் பட்டாணி, வேர்க்கடலை, கொண்டைக்கடலை, பாசிப்பயறுனு தினமும் மாத்தி மாத்தி ரெண்டு வகை சுண்டல் தயார் பண்ணிக்கொண்டு போவோம். முந்தியெல்லாம் ஒரு குடும்பத்துக்கு எப்படியும் முன்னூறு ரூபாயாவது கெடைச்சுடும். இப்ப ஒரு வருசமா எல்லா விலைவாசியும் ஏறவும், எங்க லாபம் ரொம்பவும் குறைஞ்சு போச்சு. விலைவாசி ஏறிப்போச்சுன்னு ரெண்டு ரூபா சுண்டல் பொட்டலத்துல சனங்களுக்கு எவ்வளவு சுண்டல் கொறைச்சுத் தர முடியும்?'' என்கிறார் கோவிந்தராஜ்.

**- ஸ்ரீரங்கம் திருநாவு**

* அஞ்சலை



இரா. முருகன்

# இண்டர்நெட்

டியூப்லைட் இல்லாத கல்யாண மண்டபமும், கேதோட் ரே டியூப் இல்லாத வீடும் காணக் கிடைப்பது அரிது. கேதோட் ரே டியூப்? சுருக்கமாக சி.ஆர்.டி. நம் வீட்டு டெலிவிஷன் திரையாக, உள்ளேயிருந்து மின்கதிரை திரைக்கு அனுப்பும் 'எலக்ட்ரான் துப்பாக்கி'யாக வடிவெடுத்தது சி.ஆர்.டி.தான். இதன் எளிய வடிவம், மின்னலையைத் திரையில் நகரும் புள்ளியாகக் காட்ட வசதி செய்யும் ஆசிலோஸ்கோப். இந்த சி.ஆர்.டி.யும் ஆசிலோஸ்கோப்பும் அறிமுகமாகி நூறு வருடமாகிவிட்டது. செஞ்சுரி போட்ட இவற்றின் உடன் பிறந்த சகோதரி, வீடியோ விளையாட்டு. இந்த உ.பி.ச.வின் தற்போதைய வயசு ஐம்பது சொச்சம்.

முதலில் ஆசிலோஸ்கோப்பில் ஒளிப் புள்ளியை அசைய வைத்து, திரையில் பின்னணியாக கடைத் தெரு, தோட்டம் துரவு என்று வரைந்து வீடியோ விளையாட்டென்று காப்புரிமை பெற மனு போட்டார்கள். அமெரிக்காவில் 'துப்பாக்கி சுடும் விளையாட்டு' என்ற பெயரில் அதிரடி அறிமுகமானது. அசைகிற ஒளிப்புள்ளிதான் துப்பாக்கிக் குண்டு, திரையில் வரைந்து வைத்ததைக் குறிபார்த்துச் சுடுவதற்கு ஒளிப் புள்ளியை நகர்த்த வேண்டும். அவ்வளவுதான்.

இதைத் தொடர்ந்து டி.வி. திரையிலேயே புள்ளியைப் பந்தாக நகர்த்தி விளையாடும் கலபமான டென்னிஸ் அறிமுகமானது. இப்படி விளையாட்டாகக் கோடு போட்ட தடத்தில் ரோடு போட்டு, நாடு நகரமெல்லாம் வீடியோ பார்லர்கள் திறக்கப்பட்டன. ஒன்றுக்கு மேற்பட்டவர்கள், ஒரே திரையிலோ அடுத்தடுத்த திரைகளிலோ ஒரே விளையாட்டைத் தேர்ந்தெடுத்து இயக்கி விளையாடும், இந்த வீடியோ கடைவீதி விளையாட்டுகள் 1980களில் உச்சத்திற்குப் போய், இன்று காணவே காணோம்.

பெர்சனல் கம்ப்யூட்டரும் லேப் டாப் மடிக் கணினியும் பரவலாக உபயோகத்துக்கு வந்த கடந்த பத்தாண்டுகளில், வீடியோ விளையாட்டுகள் இன்னொரு சுற்று வெற்றிகரமாக வலம் வர ஆரம்பித்தன. டெக்னாலஜியும் கலையும் கலக்கலாகக் கைகோர்த்து லட்சக்கணக்கில் பணம் புரளும் இன்னொரு ஊடகம் இது. சோனி போன்ற நிறுவனங்கள் திரைப்படம், வீடியோ விளையாட்டு என்று இரண்டு துறையிலும் பிரபலமானதால், படத்தை வெளியிட்டுவிட்டு, கூடவே அதன் அடிப்படையில் வீடியோ விளையாட்டு சி.டி.யையும் ரிலீஸ் செய்து, வசூல் ராஜாவாகின்றனர். தமிழிலும் வரப் போகிறது.

சினிமாவில் இல்லாத இன்னொரு சுவாரசியம், வீடியோ கிரிக்கெட்டில் டெண்டுல்கருக்குச் சமமாக எதிர்முனையில் மட்டை பிடித்து ரன்னை அள்ளிக் குவித்து ஆஸ்திரேலிய அணிக்கு டின் கட்டும் இந்திய நட்சத்திர ஆட்டக்காரர், சாட்சாத் நீங்கள்தான்.

இண்டர்நெட்டும் ப்ராட்பேண்டும் பெர்சனல் கம்ப்யூட்டர் உலகில் ஆதிக்கக் கொடி நாட்டியபின், வீடியோ விளையாட்டிலும் நல்ல முன்னேற்றம். இரண்டு வருடம் முன்பு ஈவ் ஆன்லைன் வழங்க,

வீடியோ கேம் ஆடுற டாக்டர்கிட்டதான் மூக்கு ஆபரேஷன் பண்ணணும்!

36,000 பேர் கலந்து கொண்ட இன்டர்நெட் வீடியோ விளையாட்டு பஞ்சாயத்துத் தேர்தல் மாதிரி பரபரப்பு செய்தி.

பிரபலமான வீடியோ விளையாட்டுகளில் ஏமாற்றி வெற்றி பெறவும், பல பேர் ராத்தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு இன்டர்நெட்டில், இலவச யோசனை வழங்கு கிறார்கள்.

வீடியோ விளையாட்டில் ஈடுபாடு உள்ள மருத்துவ அறுவை சிகிச்சை நிபுணர் களையும், ஈடுபடாத சர்ஜன் களையும் வைத்து ஆய்வு செய்து, சமீபத்தில் பரபரப் பான சர்வே நடத்தி முடிவு வெளியிட்டிருக்கிறார்கள். வீடியோ கேம் ஆடிய டாக்டர் கள், கத்தி பிடித்து அறுவை சிகிச்சை நடத்தும் கச்சிதத் திலும் செயல்படும் வேகத்தி லும் விளையாடாத டாக்டர் களைவிட இருபத்தேழு சத விகிதம் முன்னணியில் இருக் கிறார்களாம். ●

# யோசனை!

# ஞாயிறு என்பது கண்ணாக...

தஞ்சாவூர்க் கவிராயர்

மழையில் நனைந்து கொண்டே வருகிற ரயிலைப் பார்க்கும்போதெல்லாம், எனக்கு மஞ்சுளாவின் ஞாபகம் வந்து விடுகிறது.

இருபத்தைந்து வருஷங்களுக்கு முந்தைய காதல் கதையைச் சொல்கிறேன்.

வருஷங்கள் எத்தனை ஆனால் என்ன? காதலின் வர்ணங்கள் மங்குவதே இல்லை!

தஞ்சாவூர் - கும்பகோணம் மார்க்கத்தில் இருந்தது, எங்கள் கிராமத்து ரயில்வே ஸ்டேஷன்.

அழகான துப்புரவான ரயில்வே ஸ்டேஷன்.

ஒன்றிரண்டு பாஸஞ்சர் ரயில்கள், எங்கள் கிராமத்து அழகை ரசிப்பதற்காகவே நின்று செல்வதுபோல் தோன்றும்.

நாங்கள் பத்துப் பதினைந்து கல்லூரி மாணவர்கள், தஞ்சாவூரில் இருந்த கல்லூரிக்குச் செல்ல இந்த ரயில்களைத்தான் நம்பி இருந்தோம். இதில் நாலைந்து பேர் மாணவிகள். அவர்களில் ஒருத்திதான் மஞ்சுளா.

மஞ்சுளா, கறுப்புதான். ஆனால் பல மைல் நீளக் கண்கள். ஒரு சிற்பி பெண்ணின் உடலை அவசரஅவசரமாகச் செய்து விட்டு, கண்களைச் செதுக்குவதில் அதிகநேரம் எடுத்துக்கொண்டது போல, பிரம்மன் இவள் விஷயத்தில் நடந்து கொண்டிருப்பான் போல.

மொத்தத்தில் அவள் எங்கள் ஊர் கிளியோபாட்ரா. அவளால் நியமிக்கப் படாத பாதுகாவல் படையாக நாங்கள்.

நான் வெறும் உப்புக்குச் சப்பாணிதான். 'கிளியோபாட்ராவுக்காக' அவர்கள் ரயிலில் அடிக்கிற கூத்தும் கும்மாளமும் கொஞ்சமல்ல.

அப்போதெல்லாம் அவள் எங்களை நோக்கி வீசிய உஷ்ணப் பார்வையில், எனக்கென்று ஏதோ ஒரு குளிர்ச்சி தெரியும். 'இதெல்லாம் சுத்தப்பிரமை!' என்று உதறித் தள்ளியும் முடியவில்லை.

ஐயோ, அந்தக் கண்கள்!

மஞ்சுளாவாவது என்னைப் பார்ப்பதாவது...

அப்போது நான் ரொம்ப ஒல்லியாக இருப்பேன். சிவப்பாக, அரும்பத் தொடங்



கிய மீசையுடன், இலேசான பெண்மைச் சாயலுடன்கூடிய முகத்துடன் இருப்பேன்.

அசத்தலான டிரஸ் என்னிடம் இல்லை. வேஷ்டியும் சட்டையும்தான்.

ஆனாலும் ஒரு நாளாவது மஞ்சுளாவின் அந்தக் கண்களைச் சந்திக்காவிட்டால் எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும்.

'ஏன்டா ஒரு மாதிரி இருக்கே...' என்று நண்பர்கள் நச்சரிப்பார்கள். 'மஞ்சுளாவைக் காணோமே... அதான்' என்று மனசுக்குள் சொல்லிக்கொள்வேன்

ஒருநாள் ஸ்டேஷனுக்குச் சீக்கிரமாகவே புறப்பட்டுவிட்டேன். எனக்கு முன்னால் மஞ்சுளா போய்க் கொண்டிருந்தாள்.

மயில் நடந்துகொண்டிருந்தது. மழை வரும்போல இருந்தது.

மஞ்சுளா, எனக்குப் பிடித்த இரட்டைப் பின்னல் போட்டிருந்தாள். மஞ்சள் ரிப்பன்



## ஆதிநாராயணா - குறிப்புகள்

* சிவாஜி, நடித்த 'தெய்வ மகன்' படத்தின் தலைப்புதான் இந்தப் படத்துக்கும் வைக்கப்பட்டது. பிறகுதான் 'ஆதிநாராயணா' என மாற்றியிருக்கின்றனர். காரணம் - சிவாஜி ஃபிலிம்ஸ் * இரவு பதினோரு மணிக்கு கதை கேட்ட மீரா ஜாஸ்மின், கதாநாயகியாக நடிக்க ஒப்புக் கொண்டிருக்கிறார். * கதாநாயகன் கஜன் புதுமுகம். என்ஜினீயரிங் முடித்தவர். மீராஜாஸ்மினுக்காக நான்கு மாதம் படப்பிடிப்பைத் தள்ளிப்போட்டிருக்கிறது படக்குழு! * 25 சதவிகிதம் படம் முடிந்த நிலையில் படத்தைப் பார்த்த மீரா, ஒளிப்பதிவாளர் வின்சென்ட் செல்வாவைப் பாராட்டித் தள்ளிவிட்டாராம். * இயக்குநர் வெற்றிவேந்தன் மட்டுமல்ல, இரண்டாவது ஹீரோயின் யோகிதாவும் புதுமுகம். எத்திராஜ் காலேஜ் ஸ்டூடண்ட். அப்ப இன்னொரு த்ரிஷா ரெடி.

- கண்மணி

பின்னலில் இலையுடன் கூடிய பெரிய சிவப்பு ரோஜா. பெரிய பெரிய பூப் போட்ட பாவாடை. கச்சிதமான தாவணி.

வேகமாக நடந்தேன். வேஷ்டி தடுக்கியது. அவளைக் கடக்கும்போது ஓரக் கண்ணால் கவனித்தேன்.

அவள் முகத்தில் முறுவல். எனக்கு ஆகாசத்தில் மிதப்பதுபோல் இருந்தது.

''என்ன இன்னைக்குச் சீக்கிரமே வந்துட்டாப்ல இருக்கு...''

சுற்றுமுற்றும் பார்த்தேன். என்னைத்தான் கேட்கிறாள்.

''அ... ஆமாம்'' தடுமாறினேன்.

''உனக்கு வேஷ்டிதான் பிடிக்குமோ?''

என்ன துணிச்சல்.

''இல்லே... எப்போ பார்த்தாலும் வேஷ்டியிலேயே வர்றியேன்னு கேட்டேன்.''

எனக்குப் பேசத் தோன்றவில்லை.

''பேண்ட் போட்டா இன்னும் அழகா இருப்பே...''

அதற்குள் அந்தக் கண்கள் எத்தனை முறை படபடத்துவிட்டன...

திடீரென்று ஸ்டேஷன் சமீபித்துவிட்டது.

''இன்னைக்கு உன்னோட வர்ற குரங்குப் பட்டாளத்தைக் காணமே. அப்பாடா நிம்மதி... ஒரே கம்பார்ட்மென்ட்ல போலாமா?''

''வேண்டாம். வேண்டாம். வைத்தி பாத்தா வத்தி வெச்சுடுவான்!''

''சரியான பயந்தாங்கொள்ளி...''

''அஞ்சுவது அஞ்சாமை பேதமை...''

''புலவரோ?''

''கவிதையெல்லாம் எழுதுவேன்...''

''எதைப் பத்தி...?''

மோகனமாய்ச் சிரித்தபடி கேட்டாள்.

''உன்னைப் பத்தி...''

மஞ்சுளா, சட்டென்று நின்றாள்.

''நிஜம்மாவா?'' அவள் புருவம் வியப்பில் விரிந்தது.

ரயில் வந்துவிட்டது.

ஒரு காதலனின் மொத்த ஏக்கத்தையும் வெளியிடுவது மாதிரி 'உஸ்ஸ்ஸ்' என்று பெருமூச்சு விட்டபடி நகர்ந்தது ரயில்.

அதற்கப்புறம் நானும் மஞ்சுளாவும் தனிமையில் சந்திக்க ஏற்படுத்திக்கொண்ட சந்தர்ப்பங்களை, அந்தப் பகல் நேர பாஸஞ்சர் வண்டிகளே அறியும்.

எனக்கு அவளைத் தொடக்கூட பயம்; கூச்சம்.

மழைக்காலம் வந்துவிட்டது.

ஜிலுஜிலுவென்று சாரல் வீசும் காற்றில் ஜன்னல் வழியே வேடிக்கை பார்த்தபடி பயணிப்போம்.

***''ஞாயிறு என்பது கண்ணாக***
***திங்கள் என்பது பெண்ணாக***
***செவ்வாய் கோவைப் பழமாக***



*சேர்ந்தே*
*நடந்தது அழகாக...''*
- பாடுவேன்.

அடுத்தவரிகளை மஞ்சுளா பாடுவாள்.

***''நேற்றைய பொழுது கண்ணோடு***
***இன்றைய பொழுது கையோடு***
***நாளைய பொழுதும் உன்னோடு***
***நிழலாய் நடப்பேன் பின்னோடு!''***

**ம**ழையில் இரண்டு பேருமே தொப்பலாக நனைந்துவிட்டோம்.

ஜன்னலோர சீட். நடுக்கும் குளிர்.

நனைந்து சில்லிட்டிருந்த தன் விரல்களை நீட்டினாள்; தொட்டேன்.

''இந்தப் பாட்டு நமக்குன்னே எழுதுன மாதிரி இருக்குல்ல...?'' - கேட்டாள்.

அவள் விரல்கள் ஐஸ் போல சில் லிட்டிருந்தன.

''எங்கே உன் கையைக் காட்டு பார்க்கலாம்...''

சிரித்தபடி நீட்டினேன்.

''ஏய் உன் மனைவி அழகா, சிவப்பா, தேவதை மாதிரி இருப்பா...''

''உன் ஜோஸ்யம் தப்பு. என் மனைவி கறுப்பா, பெரிய பெரிய கண்களோடு இருப்பா...''

''நான் சொல்றது நிஜம். பெங்களூர் போயிடலாம்னு அப்பா சொல்லிக் கிட்டிருக்கார்...''

''பெங்களூர் அப்புறம் போக லாம். நாளைக்கு சினிமா போலாமா? ஞானம் டாக்கீஸில் புதுப்படம் வந் திருக்கு.''

''என்ன படம்?''

''நெஞ்சம் மறப்பதில்லை.''

**ஞா**யிற்றுக் கிழமை அதிகாலை.

நான் தூங்குவதாக நினைத்துக்கொண்டு அப்பா அம்மாவிடம் சொல்லிக் கொண் டிருந்தார்.

''நேத்திக்கு உன் மகன் காலேஜுக்கு 'கட்' அடிச்சுட்டு ஒரு பொண்ணோட ஞானம் டாக்கீஸ்ல 'மாட்னிஷோ பாத்துருக்கான்.

இந்த மாதிரி காதல், கத்திரிக்கான்னு அலைஞ்சான்னா என்னால காலேஜ். ஃபீஸ் எல்லாம் கட்டமுடியாது''

''உடனே பாயாதீங்க. நான் கண்டிச்சு வைக்கிறேன்.''

அப்பா போய்விட்டார்.

அம்மா அன்றைக்கு எனக்குப் பிடித்த ஆப்பமும் தேங்காய்ப்பாலும் செய்திருந் தாள்.

எனக்குத்தான் சாப்பிடப் பிடிக்க வில்லை.

''என்னடா அப்படியே வைச்சிருக்கே!''

''.........''

''டேய், எனக்கு எல்லாம் தெரியும்டா. அவ பேர் என்னடா?''

''மஞ்சுளா..''

''பேர் நல்லாத்தான் இருக்கு. எனக்கு ஒரு ஆசைடா...''

''சொல்லும்மா..''

''உன்னை விரும்பற பொண்ணு, எப்படி இருப்பான்னு பாக்க ஆசையா இருக்குடா!''

எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

''நீ எல்லாம் அம்மாவா? என்னைக்

கண்டிக்காம செல்லம் கொஞ்சறியே!''

''என்னடா பெரிய்ய தப்பு பண்ணிட்டே? உன்னைப் பத்தி எனக்குத் தெரியும்டா. அவளை ஒரு நாள் அழைச்சுக்கிட்டு வாடா!''

இதை மஞ்சுளாவிடம் சொன்னேன். விழுந்து விழுந்து சிரித்தாள்.



ஒரு நாள்.

காலேஜிலிருந்து திரும்பும்போது வீட்டுக்கு முன்னால் கும்பல்.

அம்மாவுக்கு வாந்தி மயக்கம். அடிக்கடி வருவதுதான். இந்த முறை இரத்த வாந்தி.

டாக்டர் அப்பாவைக் கடிந்துகொண்டார்.

''லிவர் பிராப்ளம் 'கிரானிக்கா' இருக்கே! ட்ரீட்மெண்ட் கொடுக்கலையா?''

அப்பா அரசாங்க ஆஸ்பத்திரி மருந்து சீட்டுகளைக் காண்பித்தார்.

''ஓ! காட்! எல்லாம் சரியான மருந்துகள்! ஒரு பக்கம் லிவர் என்லார்ஜ்மெண்ட் ஆயிட்டே இருந்திருக்கு!''

அம்மாவுக்கு நினைவு திரும்பவில்லை. டாக்டரின் முயற்சிகள் தோற்றுப்போய்-

அம்மாவைக் கூடத்தில் கிடத்தி இருந்தார்கள்.

உறவினர்கள் நண்பர்கள் என்று கூட்டம் கூடிவிட்டது. அந்தக் கும்பலில் மஞ்சுளாவும் நின்றிருந்தாள்! கடைசிவரை அம்மாவால் பார்க்கமுடியாத மஞ்சுளா! அவள் கன்னங்களில் கண்ணீர்க் கோடுகள்!

அப்பா என்னை ஹாஸ்டலில் சேர்த்துவிட்டார். மஞ்சுளா பெங்களூரில்.

மழையில் நனைந்தபடி ரயில் வந்துகொண்டிருந்தது.

தோளில் குழந்தை தூங்கிப் போயிருந்தாள். பக்கத்தில் அழகாய் மஞ்சுளா சொன்ன தேவதை. என் மனைவி.

தேவதை திருவாய் மலர்ந்தது.

''மசமசன்னு நிக்காம ரயில் வந்ததும் சீட்டப்புடிங்க. வீட்டுக்குப்போய் வேலை செஞ்சு காலைல ஆஃபீஸுக்கும் ஓடணும்! உங்களுக்கென்ன கவிதை எழுதறேன். கன்றாவி எழுதறேன்னு உக்காந்துடுவீங்க! எல்லாம் என் தலையெழுத்து!''

ரயில் ஜன்னல் வழியே மழை என்னைத் தொட்டது.

**'ஞாயிறு என்பது கண்ணாக**
**திங்கள் என்பது பெண்ணாக**

அப்படியே கண்களை மூடிக் கொண்டேன்.

**'நேற்றைய பொழுது கண்ணோடு**
**இன்றைய பொழுது கையோடு'**

மஞ்சுளா சிரித்தபடி பாடினாள்.

ரயிலின் கம்பிகளைத் தொட்டேன்.

இரட்டை ஜடையும் மஞ்சள் தாவணியும் அணிந்த, ஒரு சின்னஞ்சிறு பெண்ணின் ஜில்லென்ற விரல்களை ஸ்பரிசிப்பது போல் இருந்தன அந்த ஜன்னல் கம்பிகள். ●

# பெயர் தெரியாதவள்

பழநிபாரதி

அவளைச் சந்தித்தபோது
தென்மேற்கு எதுவென்று
காற்று அவளிடம்
வழி கேட்டுக்கொண்டிருந்தது

கூந்தலை
இரவாகப் படரவிட்டிருந்தவள்
மின்மினிகளை
இமைகளுக்குள்
ஒளித்திருந்தாள்

வெட்டிவேர் மணக்கும்
அவளது மூச்சு
மேகங்களைக்
குளிர வைத்தது

வண்ணத்துப் பூச்சிகளைப்
பறக்கவிட்டுக்கொண்டே
நடந்தாள்

மிதந்த அவளது நிழலில்
தளும்பியது வாய்க்கால்

இலைகளெல்லாம்
தோரணங்களாகிய
மாமரத்தின் கிளையில்
பெயர் தெரியாத அவளை
ஆலாபித்து அழைத்தன
குயில்கள்

அவளுக்காக
காத்திருந்த எதையும்
அவள்
கவனிக்கவே இல்லை

அருணாவின் எழுபது வயது மாமியார், பாத் ரூமில் வழுக்கி விழுந்து ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்யப்பட்டுள்ளதாக, மதுரையில் இருக்கும் மாமனார் பதற்றத்துடன் சொன்னார்.

மதுரைக்குப் போகும் அவசரத்திலும் ஸ்டேஷனில் வெயிட் பார்த்தபோது, அருணா மூன்று கிலோ குறைந்திருந்தாள்.

அருணாவுக்கு ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்கும் அலையவே சரியாக இருந்தது. ஜிம் கட்டானது. வேர்க்க விறுவிறுக்கச் செய்யும் உடற்பயிற்சி இல்லாததால் உடலுழைப்பு வேறு குறைந்தது. விளையாட்டுப் போல ஒரு மாதம் ஓடி விட்டது. ஒருவழியாக மாமியாரை வீட்டுக்குக் கூட்டி வந்தாள்.

## லக்ஷ்மி மோகன்

அன்று ஹரி அழைத்துப் போவதற்கு ரயில்வே ஸ்டேஷன் வந்தான். இரண்டு மாதத்தில் இப்படியா? சரியான சாப்பாடின்றி கிட்டத்தட்ட ஹரி பாதியாகி இருந்தான்.

''என்னாச்சுங்க?'' என்றவளிடம், ''சாலட்டும் ஸ்ப்ரவுட்டும் தான் சாப்பிட்டேன். சிவியர் எக்ஸர்ஸைஸ் வேற. முழங்கால் வலியும் போயிந்தே'' என்று அருணாவை வெறுப்பேற்றினான்.

வந்த முதல் நாளே ஜிம்முக்குச் சென்றாள். முதலில் வெயிங் மெஷினில் ஏறி நின்றாள். இறங்கியிருந்த மூன்று கிலோ இப்போது ஏறியிருந்தது. கோச்சிடம் சொன்னாள்.

அருணாவால் உடலை அசைக்கவே முடியவில்லை. ஒரு சாதனத்திலும் முன்பு போல் பயிற்சிசெய்ய முடியவில்லை. கண்ணில் நீர் வரும் அளவுக்கு கை கால் வலி. ''இப்படி மாசக் கணக்குலல்லாம் கேப் விடக்கூடாது. இன்னும் ஒரு வாரம் ஆனதும் சரியாப் போயிடும்'' என்றாள் கோச்.



ஜிம்முக்குச் செல்லும் நேரம் வந்தாலே வயிற்றைக் கலக்க ஆரம்பித்தது. பழையபடியும் தைலங்கள் வெளியே வந்தன. அதிக வெயிட் போட்டது போல் உணர்ந்தாள்.

இப்போது ராதுவின் நினைவு வந்தது. அவளின் செல் நம்பரை அழுத்தினாள் அருணா.

''ஹாய் ராது, நீதான் எனக்கு ஹெல்ப் பண்ணணும்ப்பா. நீ எப்படி வெயிட்டைக் குறைச்ச?'' ராது ஜிம் அட்ரஸ் கொடுக்க பயபக்தியாய்க் குறித்துக்கொண்டாள்.

அன்று ஹரி வந்ததும் மெதுவாக ஆரம்பித்தாள். ''உங்கம்மாவுக்கு ஹெல்ப்புக்குப் போனதுலதான் ஜிம் டச் விட்டுப் போச்சு. இப்போ செய்ய முடியல.''

''ம்க்கும்... நீயே ஏதுடா சாக்குனு இருந்த. காக்கா உக்கார பனம் பழம் விழுந்த கதையாச்சு'' என்றான் அவன்.

அன்று வழக்கம்போல் வேலையை முடித்துவிட்டு, வேகவேகமாக இரண்டு ஸ்டாப் தள்ளி இருக்கும் கே.எல்.சி.சி.க்கு பஸ் பிடித்துச் சென்றாள். அதுதான் ராது சொன்ன இடம். ஏதோ ஆர்வத்தில் வந்துவிட்டாள். ஆனால், அருணாவுக்கு பில்டிங் முகப்பைப் பார்த்தாலே உள்ளே நுழைய பயமாய் இருந்தது.




50 Kg தாஜ்மஹால்!

மாதவிடாய்க் கோளாறுகளில் இன்று பல பெண்களையும் பாடாய்ப்படுத்தி வரும் பாலிசிஸ்டிக் ஓவரி பிரச்னைக்கு முழுமுதல் காரணம், உடல் எடை அதிகரிப்பதுதான். பி.ஸி.ஓ.டி. ஏற்பட்டால் உடல் எடை கூடும். உடல் எடை கூடினால் பி.ஸி.ஓ.டி. தலைதூக்கும். முறையான உடற்பயிற்சி மூலம் உடல் எடை குறையும்போது மாதவிலக்கு ஒழுங்காக வரும்.

பருமனான பெண்களுக்கு மாதவிடாய் நிற்கும் வேளையிலோ அல்லது நின்ற பிறகோ மார்பகப்புற்று வர வாய்ப்புள்ளதாக ஆராய்ச்சிகள் அறிவிக்கின்றன. மாதவிடாய் நின்றபிறகு சினைப்பை ஈஸ்ட்ரோஜனை நிறுத்திவிடுகிறது. கொழுப்புத் திசுவானது குறைந்த அளவு ஹார்மோனைச் சுரக்கச் செய்து இரத்தத்தில் கலந்துவிடுகிறது. இது தொடர்வதால் மார்பகப்புற்று உண்டாகிறது.

நீரிழிவு நோயாளர்கள் தமது எடையில் குறைக்கும் ஒவ்வொரு கிலோவும், அவரது வாழ்நாளை மூன்று முதல் நான்கு மாதங்கள் அதிகரிக்குமாம்.

# ஜாக்கிரதை!

**அந்திமழைக்குப் பயந்து சென்னை மீனாட்சி காலேஜுக்குள் ஒதுங்க, இளமை மழையில் நனைந்து போனோம்.**

''பி.பி.எம். க்ளாஸ் பக்கம், லஞ்ச் டைம் வந்து பாருங்க. சும்மா அப்படியே மிரண்டடிச்சு ஓடிடுவீங்க'' என்று பலத்த எச்சரிக்கையுடன் ஆரம்பித்தார் ரம்யா. ''எங்க கொஞ்சம் சாம்பிள் தெளிங்க, மிரளறேன்னா இல்லையான்னு பார்ப் போம்'' என்றதுதான் தாமதம்.

''டீச்சர் ரொம்ப சீரியஸா ஒரு



மாணவனைப் பார்த்து, 'உன் படிப்பு மேல யாருக்குமே அக்கறை கிடையாதா?'ன்னு கேட்டாங்க. அதுக்கு அந்த மாணவன் 'ஒருத்தருக்கு மட்டும் ரொம்ப அக்கறைங்க டீச்சர். அவர் தினமும் என்னைப் பார்க்கும்பொழுதெல்லாம் பாஸா பாஸான்னு கேட்பார்' என்றான்.

அந்த அதிகப்பிரசங்கி யாருன்னு சொல்லுங்க பார்ப்போம்'' நம்மை மடக்கினார் ரம்யா. ''நீங்களே பதில் சொல்லுங்க'' என்றதும், ''பஸ் கண்டக்டர்தான். அவர்தான் தினமும் பஸ்ல ஏறினதும் பாஸா, பாஸான்னு கேப்பார்'' என்ற ரம்யாவை, கல்லூரியின் கடிமன்னி என்று கொண்டாடினர்.

''சீனியர் அக்காவே இப்படின்னா ஜூனியர் நாங்க என்ன ஜுஜுபின்னு நினைச்சீங்களா?'' என சொல்லியபடி களத்தில் குதித்த ஆர்த்தி, தத்துவ மழைகளைப் பொழிய ஆரம்பித்தார்.

''நாம அடிச்சா மொட்டை, அதுவா விழுந்தா சொட்டை'', ''நீ பஸ்ல ஏறினாலும், பஸ் உன் மேல ஏறினாலும் டிக்கெட் வாங்கப்போவது என்னவோ நீதான்'', ''லஞ்ச் பாக்ஸ்ல லஞ்ச் கொண்டு போகலாம், ஆனா ஸ்கூல் பேக்ல ஸ்கூலைக் கொண்டு போக முடியாதேம்மா'' என நடிகர் திலகமானார்.

''ஏய், இது ரொம்ப ஓவரா தெரியலை'' எனச் சிரித்தபடி, ''இப்போ



பெயர்சூட்டு விழாவுக்கு உங்களை அழைக்கிறோம். வாரீர் வாரீர்'' என குரல்கொடுத்த வைஷ்ணவியைச் சுற்றி மாணவியர் கூட்டம் சூழ்ந்து கொண்டது.

''இவதான் 'டெரர் சந்தியா'. என்னா எல்லாரையும் எப்பப் பாரு, 'ஆய்,' 'ஊய்'ன்னு பாட்ஷா கணக்கா மிரட்டுவா. இதோ இவ 'ஆக்ஸ்ஃபோர்டு செல்வி' இங்கிலிபீஸ்லதான் பேசுவா. தண்ணி குடுன்னுகூட கேட்க மாட்டா. 'வாட்டர் பாட்டில் ப்ளீஸ்'ன்னுதான் சொல்லுவா. இன்னொருத்தி பேரு பாபி. ஏன் தெரியுமா? தன்னை மதன்பாப்ன்னு நினைச்சுக்கிட்டு எப்பவும் ஹஹ்ஹான்னு சிரிச்சுக்கிட்டே இருப்பா. chubbyயா கன்னங்கள் வெச்சிருக்கிறவங்க பேரு லட்டு. ம்...ம்ம்ம்ம்... ஆ... அப்புறம் பெரிய பெரிய மீசை எல்லாம் வெச்சுக்கிட்டு காவல் தெய்வம் மாதிரி இருக்கறவரு பேரு அய்யனார்.

நல்லா இருக்குல்ல. எல்லாரும் ஜோரா ஒருமுறை கைதட்டுங்கப்பா'' என்றார்.

''நான் ஒரு சூப்பரான விஷயம் சொல்லவா?'' என ஆரம்பித்தார் மூன்றாம் ஆண்டு பிகாம் படிக்கும் ராஜேஸ்வரி. ''நம்ம சூப்பர் ஸ்டார் ஸ்போக்கன் இங்கிலீஷ் வகுப்புக்குப் போனா அங்க அவரு எப்படி எல்லாம் பேசுவாருன்னு சின்னக் கற்பனை.

tell only I do - do only i tell (நான் சொல்றததான் செய்வேன். செய்யறததான் சொல்லுவேன்)

hillda brother hillda (மலைடா அண்ணாமலைடா)''

எனத் தொடர்ந்த ரஜினி மொழிகளை ''ஹேய் போதும் போதும் நிறுத்து. நாங்க கிளம்பறோம்... நீ நிறுத்தலேன்னா உன்னையும் சேர்த்துக் கிளப்பிடுவோம்'' எனக் கூறியபடி கலகலவென கலைந்து போனார்கள்.

**"லஞ்ச் பேக்ல லஞ்ச் எடுத்துட்டுப் போலாம். ஸ்கூல் பேக்ல ஸ்கூல எடுத்துட்டுப் போக முடியுமா?!"**

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

கோடைக்கு முன் பெய்த கனமழையில், கண்மாய் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. கண்மாயை ஒட்டி அமைந்திருந்த குடியிருப்புப் பகுதிக்கு, இம்முறை தண்ணீர்ப் பிரச்னை வருவதற்கு வாய்ப்பில்லை.

அப்பாடா!

உழுது தயாரான நிலத்தில் விதைகளைத் தூவுவதைப் போல, நீர் நிறைந்திருந்த கண்மாயில், மீன் குஞ்சுகள் விதைக்கப்பட்டிருந்தன. லாபம் நிறைந்த தொழில், வெளியே யாருக்கும் அவ்வளவாகத் தெரியாது.

பத்து சதவிகிதம், மடைகளில் கட்டியிருக்கும் வலைகளையும், மீறி ஓடுகால்களில் நழுவி விடும். அடுத்த பத்து சதவிகிதம் அழுக்கு நிறப் பறவைகளின் உணவாகிவிடும். இன்னும் கொஞ்சம் தட்பவெப்ப மாறுதல்களினால் செத்து மிதக்கும்!

கூட்டிக் கழித்தால் எழுபது சதவிகிதம் பயன் தரும் - ஒன்றுக்குப் பத்தாய்!

குத்தகைகாரருக்கு லாபம்; பஞ்சாயத்துக்கும் வருமானம்.

சாமிப்பிள்ளை, அந்தப் பகுதிக்குப் புதிதாய்க் குடிவந்தவர், ஒய்வுபெற்ற தமிழாசிரியர் எப்படி இருப்பார்? சாமிப்பிள்ளையைப் போல இருப்பார். தினமும் வாக்கிங் போகும் போது கரையிலிருந்து ததும்பி நிற்கும் நீர்ப்பரப்பைக் கண் குளிரப் பார்ப்பார்.



# மீன் குஞ்சுகள்

அப்போது தன்னை மறந்து, சில நேரங்களில் ஏதோ கவிதை வரிகளை முணு முணுப்பதும் உண்டு.

கூடவே வாக்கிங் போகும் அப்பகுதி பஞ்சாயத்துத் தலைவரும், அவரது சகாக்களும்கூட நிரம்பியிருக்கும் கண்மாயைப் பற்றியே சிலாகித்துக் கொள்வது வழக்கம்.

பஞ்சாயத்துத் தலைவர் என்றவுடன் கரை வேட்டி, வெள்ளை சட்டை, முற்றின முகத்துடன் யாரையும் கற்பனை செய்துவிடக் கூடாது. செழியன் தான் அப்பகுதியின் இளம்பஞ்சாயத்து தலைவர்! அட்வகேட்டுக்குப் படித்தவன். இருபது வருடங்களாகத் தந்தை வகித்த பதவியை, அப்பகுதி மக்களின் பெருவாரியான வோட்டுகளைப் பெற்று, தற்போது தக்க வைத்திருப் பவன். ட்ராக் சூட்டும் டீ சர்ட்டுமாய், செழியன் அரசியல் சகாக்களுடன் வாக்கிங் போகும் போது வித்தியாசமாய் இருக்கும். படித்த முகக் களையும், ஆங்கில உரையாடலும் இளம் தலைமுறையினரின் அரசியல் பிரவேசம் குறித்துப் பெருமைப்பட வைக்கும். செழியனைச் சுற்றி இருக்கும் அரசியல் சகாக்கள், அவனை 'தலைவரே' என கூப்பிடுவதை ஒவ்வொரு முறையும் விரும்பாதது போல செழியனின் உடல் அசைவுகள் தோற்றமளிக்கும். சாமிப்பிள்ளை வாக்கிங் போகும்போது செழியனுக்கே தெரியாமல் அவனை ரசிப்பார். நடுத்தர வயது பக்கா அரசியல்வாதிகள் செழியனுடன்

**மீன் குஞ்சுகள் தங்களது இயல்பை எப்போதும் மாற்றிக் கொள்வதில்லை. தானாகவே தேவையானவற்றைக் கற்றுக்கொள்கின்றன.**

பேசும்போது எழும் முரண்பாட்டை ரசிப்பார். அன்றும் அப்படியே...

''தலைவரே... கண்மாயில் விட்ட மீன் குஞ்சுகள் எல்லாம் அமர்க்களமா வளர்ந்திருக்கு... நேத்து ஓடுகால்ல பானைபொறி வெச்சு இந்தக் கைத் தண்டி கட்லா ரெண்டைப் புடிச்சோம்.''

''புடிக்கிற பருவம் வந்தாச்சு தலைவரே... செம ருசி...''

செழியன் நிதானமாய்க் கேட்டான். ''மீன் காண்ட்ராக்டர் சொல்லச் சொன்னாரா?''

''ஆமாம். தண்ணி வத்தினதும் புடிச்சா அப்படியே அள்ளிடலாம்னார்.''

''தலைவரே இந்த வாட்டி வெள்ளரி வெள்ளாமையை எனக்குத்தான் குத்தகைக்கு விடணும்.''

''சரி.''

சுருக்கமாகப் பதில் சொல்லிவிட்டு, தான் வந்த சஃபாரி காரில் ஏறி ஆங்கில நாளிதழை விரித்து அமைதியாகப் புறப்பட்டான் செழியன். இரவு சாமிப்

பிள்ளை மனைவியிடம் பெருமையுடன் பேசிக்கொண்டிருந்தார். ''லட்சுமி, இந்த ஏரியாவில பஞ்சாயத்துத் தலைவரா உள்ள தம்பி நல்லா படிச்சவரு, அடாவடி ஆட்களாவே பாத்துப் பாத்து இப்படிப் பாந்தமான ஆளைப் பார்க்கவே சந்தோஷமாய் இருக்கு. கண்மாயில் நிறைஞ்சிருக்கிற தண்ணியைப் பயன்படுத்தி எப்படியெல்லாம் வருமானத்தைப் பெருக்கமுடியும்னு யோசனை பண்றார்.''

''பின்ன, இருக்காதா...? அரசியல் பாரம்பரியம்மிக்க குடும்பம் ஆயிற்றே. அப்பா, தாத்தா காலத்துல இருந்து பிரஸிடெண்ட்டா இருந்திருக்காங்க...''

''மொதல்லே சுருக்கமா பேசுறாரு. அதுவே அந்தப் பையன் மேலே ஒரு மரியாதையைக் கொடுக்குது.''

''எது எப்படியோ இந்த ஏரியாவில இருக்கிற ஆயிரக்கணக்கான மக்களுக்கு இந்த வருஷம் தண்ணீர் கஷ்டம் இருக்காதுல்ல...''

''அதெப்படி லட்சுமி இருக்கும்? நீர் மட்டம் கணிசமா உயர்ந்திரும்ல... 400 அடி 500 அடின்னு போர் போடுற செலவு மிச்சம்.''

உறவினர் வீட்டுத் திருமணத்துக்குப் போன சாமிப்பிள்ளையும் அவர் மனைவியும் மூன்று நாட்கள் கழித்து திரும்பி வந்தனர். அதிகாலையில் வழக்கம் போல கண்மாய்க் கரைக்குப் போன சாமிப்பிள்ளைக்கு ஏமாற்றமும் அதிர்ச்சியும் காத்திருந்தன.

மடையை யாரோ திறந்துவிட்டிருக்க வேண்டும். இல்லை, கரை எங்காவது உடைப்பு எடுத்திருக்க வேண்டும்.

கண்மாயில் கரண்டைக்கால் அளவே சகதியுடன் கலந்த நீர் இருந்தது. சாமிப்பிள்ளை மற்றவர்களைப் போலில்லை. உடனே பொதுப்பணித் துறை அதிகாரிக்கு மனு ஒன்றை தன் நடுங்கும் கைகளால் எழுதிக்கொண்டு அலுவலகம் விரைந்தார்.

கண்மாயில் ஆரம்பித்த அதிர்ச்சியும் ஏமாற்றமும் அலுவலகத்திலும் தொடர்ந்தது.

பஞ்சாயத்துத் தலைவர் செழியனும் சம்பந்தப்பட்ட இன்ஜினீயரும் நட்பாய்ப் பேசிக்கொண்டிருந்தனர். ஏனோ தெரியவில்லை. இப்போது செழியனின் தோற்றத்தில் சாமிப்பிள்ளைக்கு ஓர் அரசியல்வாதியின் சாயல் தென்பட்டது. அருகில் மீன் கான்ட்ராக்டரும், கண்மாய் வற்றினதும் வெள்ளரி வெள்ளாமையை குத்தகைக்குக் கேட்ட சகாவும் பவ்வியமாக நின்றுகொண்டிருந்தனர்.

அவர்களிருவரிடமும் ஒரு போலித்தனம் நிழலாடியது.

சாமிப்பிள்ளையால் இம்முறை நிலைமையைச் சரியாக யூகிக்க முடிந்தது.

கண்மாயைப் போலவே சாமிப்பிள்ளை, செழியன் மீது வைத்திருந்த நம்பிக்கையும் சட்டென வற்றிப் போயிற்று.

மீன் குஞ்சுகள் தங்களது இயல்பை எப்போதுமே மாற்றிக் கொள்வதில்லை. அவை தானாகவே தேவையானவற்றைக் கற்றுக்கொண்டு விடுகின்றன.



"போரில் சிறை பிடிக்கப் பட்ட நீர் 'ஃப்ரீடம்' கேட்டு ஆர்ப்பாட்டம் செய்தீராமே!"

"இல்லை பேரரசே, என் 'க்ரீடம்' கேட்டுத்தான் ஆர்ப் பாட்டம் செய்தேன்!"

- வெ.சீதாராமன்



# ஃப்ரீடமா... கிரீடமா?



"தலைவரே! நீங்கதான் என் அரசியல் குரு!"

"அப்படியா? அப்ப இதுவரை நீ 'அடிச்ச' பணத்திலே எனக்கு குருதட் சணை கொடு."

- கு. அருணாசலம்



"ஏங்க! சொர்க்கத்துல கணவனும் மனைவியும் ஒண்ணா இருக்க முடியா தாமே...?"

"அதனாலதான், அதுக் குப் பேர் சொர்க்கம்!"

- அதிரை புகாரி

# கான வீணை

**டி.எம்.எஸ். - கால் நூற்றாண்டு காலமாய் காலத்தின் கைகளில் அதிர்ந்துகொண்டே இருக்கும் கான வீணை. தமிழக மக்களின் சுக-துக்கங்களில் தவறாமல் பங்கெடுத்துக் கொள்ளும் இவரது குரலுக்கு மரியாதை செய்யும் விதமாக, டி.எம்.எஸ்.ஸின் வாழ்க்கையை கலைஞர் தொலைக்காட்சிக்காக ஆவணப் படமாக எடுத்து வருகிறார் விஜய ராஜ். அவரோடு பேசியபோது...**

''இன்று இரவு ஏ.ஆர். ரஹ்மான் - டி.எம்.எஸ். இருவரும் ஏ.ஆர்.ரஹ்மான் வீட்டில் சந்தித்துப் பேசவிருக்கிறார்கள். அங்கே படப்பிடிப்பு இருக்கிறது. நீங்களும் வந்துவிடுங்களேன்...'' என்றார்.

படப்பிடிப்பு ஆரம்பமாவதற்கு முன் வி.விஜயராஜிடம், ''டி.எம்.எஸ்.ஸின் வாழ்க்கையைத் தொடராக எடுக்க உங்களுக்குத் தோன்றியது ஏன்?'' என்று கேட்டோம்.

''நான் டி.எம்.எஸ்.ஸின் பரம ரசிகன். அடையாறு ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் நடிப்புப் பயிற்சி பெற்றேன். அதன் பிறகு தமிழக அரசின் திரைப்படச் செய்திப் பிரிவில் பணிபுரிந்தேன். வெளிநாடுகளில், அந்தந்த நாட்டின் சிறந்த கலைஞர்களை அரசாங்கமே படமாக எடுத்துப் பதிவு செய்து வருகிறது. அதுபோல் இங்கு இல்லை. அந்த முயற்சியை நாமே ஆரம்பித்தால் என்ன என்று தோன்றியது. அதன் பிறகு, அனைத்துத் தமிழ் நெஞ்சங்களிலும் குடிகொண்டிருக்கும் டி.எம்.எஸ்.ஸின் வாழ்க்கை வரலாற்றைப் பதிவு செய்வதில் தீவிரமாக இறங்கிச் செயல்பட ஆரம்பித்தேன்.



# டி.எம்.எஸ்.

## டி.எம்.எஸ்.- ஏ.ஆர்.ரஹ்மான் சந்திப்பு

டி.எம்.எஸ். முதன்முதலில் (1946-ல்) பாடியது கோவை சென்ட்ரல் ஸ்டுடியோவில் உள்ள அறை. அவர் சம்பந்தப்பட்ட இசையமைப்பாளர்கள், பாடகர்கள், கவிஞர்கள், வாயசைத்து நடித்த நடிகர்கள், இவர் மீது பற்றும் பாசமும் கொண்ட கலைஞர்கள், ரசிகர்கள்... எல்லோருடனும் அவரவர்கள் இல்லத்துக்கே டி.எம்.எஸ்.ஸை அழைத்துச்சென்று நினைவலைகளைப் பகிர்ந்துகொள்ள வைத்துப் படம் பிடித்திருக்கிறேன்'' என்று கூறிக்கொண்டு இருக்கும்போதே டி.எம்.எஸ். காரிலிருந்து இறங்கவும் இசைப்புயல் மாடியிலிருந்து வேக வேகமாய் இறங்கிவந்து, அவரை இன்முகத்தோடு வரவேற்று அமர வைத்தார். முதலில் பரஸ்பரம் பரிமாறிக்கொண்டார்கள்.

''1983-ல் திருவள்ளூர் என்ற ஊரில் டி.ஆர்.பாப்பா தலைமையில் மாபெரும் இசைக் கச்சேரி நடந்தது. அப்போ கீபோர்டு வாசிக்க நீங்க வந்திருந்தீங்க. நான், டி.ஆர்.பாப்பாவிடம், 'என்னப்பா இது ரொம்பச் சின்னப் பையனா இருக்காரே... இந்தப் பையனா கீபோர்டு வாசிக்கப் போறாரு...?' என்றேன்.

அதுக்கு டி.ஆர்.பாப்பா 'ஐயா... இந்தப் பையன் நம்ம சேகர் மகன்' என்றார். 'சேகர் கீபோர்டு வாசிப்பதில் சூரப்புலி. அவர் எட்டு அடின்னா... குட்டி பதினாறு அடி கண்டிப்பா பாயும்' என்றபடியே உங்க கிட்டே வந்து இதே மோதிரக் கையாலே குட்டி, 'நீ... ரொம்ப நல்லா இசையுலகில்

* ஏ.ஆர்.ரஹ்மான்



* விஜயராஜ்

பிரகாசிப்பே' என்று முதன் முதலில் மேடையில் ஆசிர்வதித்தேன். ஞாபகம் இருக்கா?'' என்று டி.எம்.எஸ். கேட்க, ''அதை எப்படி ஐயா... மறக்க முடியும். உங்க ஆசிர்வாதத்தில் ரொம்ப நல்லா வளர்ந்துட்டேன்'' என்றார் ஏ.ஆர். ரஹ்மான்.

''உங்க அப்பா சேகர், எங்களோட வெளிநாடுகளுக்குக் கச்சேரிக்கு வரும் போதெல்லாம், புதுசு புதுசா இசைக் கருவிகள் வாங்குவார்.

'எதுக்குப்பா இதெல்லாம்?' என்று கேட்பேன்.

'என்னோட பையனுக்கு' என்பார். பெருமையாக இருக்கும்'' என்று டி.எம்.எஸ். கூறியதும் நெகிழ்ந்து போனார் இசைப்புயல். பிறகு விஜயராஜ், இருவரையும் கேமராவுக்கு முன் அமர வைத்து சுமார் ஒரு மணி நேரம் அவர்கள் மனம் விட்டுப் பேசியதைப் படமாக்கினார். ஷூட்டிங் முடிந்ததும் ஏ.ஆர்.ரஹ்மான், டி.எம்.எஸ். காலில் விழுந்து ஆசிர்வாதம் வாங்கிவிட்டு, ''நீங்கள் என்னைத் தேடி என் இல்லத்துக்கு வந்ததை என் வாழ்நாளில் மறக்கவேமாட்டேன். மிக விரைவில் என்னுடைய இசையமைப்பில் புதுப் படம் ஒன்றில் உங்களைப் பாட வைப்பேன். இது உறுதி'' என்று வாக்குக் கொடுத்தார். இருவரும் அன்புடன் விடை பெற்றுச் சென்றதும் விஜயராஜ் பேட்டியைத் தொடர்ந்தார்.

✱ எஸ்.பி.பாலசுப்பிரமணியத்துடன்...

''பல வி.ஐ.பி.க்கள் டி.எம்.எஸ்.ஸுடன் உரையாடியதில் மறக்க முடியாத சில சம்பவங்களைக் கூறுங்களேன்'' என்றோம்.

''தமிழக முதல்வர் கலைஞர், சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் ஆகிய இருவரும் தனித்தனியாக டி.எம்.எஸ்.ஸைப் பற்றி அவர்களின் பரபரப்பான நேரங்களுக்கிடையே பேசிக் கொடுத்தார்கள்.

எம்.எஸ்.விஸ்வநாதன், கவிஞர் வாலி, பி.பி.சீனிவாஸ், எஸ்.பி.பாலசுப்பிரமணியம், சங்கர் கணேஷ் போன்றவர்கள் 'நாங்கள்தான் அவர் இல்லத்துக்கு வந்து பேசிக் கொடுக்கவேண்டும். அந்த ஜாம்பவான் எங்களைத் தேடி வரக் கூடாது. அவரை அலைய வைக்காதீர்கள்' என்று கூறி, மந்தைவெளியில் உள்ள டி.எம்.எஸ். இல்லத்துக்கே வந்து அவருடன் மனம் விட்டுப் பேசி நிறைய விஷயங்களைப் பதிவு செய்துவிட்டுச் சென்றார்கள்.

மலேசியாவில் டி.எம்.எஸ்.ஸுக்கு மாபெரும் பாராட்டு விழா நடந்தது. அதை நேரில் சென்று படமாக்கியதோடு, அங்கே பல இடங்களுக்கு அவரை அழைத்துச் சென்று படமாக்கினோம்.

மிக விரைவில் 'இமயத்துடன்' என்ற இத்தொடர் கலைஞர் டி.வி.யில் ஒளிபரப்பாகவிருக்கிறது'' என்றார்.

– தேவாதிராஜன்

படங்கள்: ஷங்கர்

✱ வாலியுடன்...



# அருள்வாக்கு



# சத்ரு

நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள்தாம் துக்கமும் கோபமும். நம் ஆசையின் நிறைவேற்றத்துக்குத் தடையாக இருந்தவர்கள் நம்மைவிடக் கீழ்ப்பட்டவர்களாக இருந்தால் அவர்களிடம் கோபத்தைக் காட்டுகிறோம்; அவர்கள் நமக்கு மேலே இருந்து விட்டால் கோபித்துக்கொள்ள முடியாமல் நமக்குள்ளேயே துக்கப்பட்டுக்கொண்டு அழுகிறோம். கோபத்தின் கெட்ட சக்தி காமத்தின் சக்தியைவிடப் பெரியது. இதை நளசரித்திரமான 'நைஷதம்' வெகு அழகாகச் சொல்கிறது. கலி அரசன் வருகிறான். அவனது சேநாதிபதிகளாகக் காமனும் குரோதனும் வருகிறார்கள். கட்டியக்காரன் இவர்களுடைய பெருமைகளைப் பாடுகிறான். குரோதனைப் பற்றி அவன் என்ன பாடுகிறான்? 'காமன் புகாத இடமில்லை என்பார்கள். ஆனால், காமனும் புகாத ஒரு கோட்டை உண்டு. அந்தக் கோட்டைக்குள்ளும் இந்தக் குரோதன் குடி கொண்டிருக்கிறானாக்கும். அது எந்தக் கோட்டை தெரியுமா? துர்வாசருடைய இதயம்தான்' என்று குரோதனின் புகழைப் பாடுகிறான். காமமே அறியாத துர்வாச மகரிஷியும் கோபத்துக்கு ஆளானவர் என்று தாத்பரியம்.

நாம் இந்த மகாபாவியான குரோதனிடம் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். யாரையும் கோபித்துக் கொண்டு சத்தம் போட நமக்குச் சிறிதும் யோக்கியதை இல்லை. யாரை நாம் கோபித்துக் கொள்கிறோமோ அவர்கள் செய்கிற தவறுகளைவிட பெரிய தவறுகளைச் செய்தவர் நாம் என்பதும் நம் அந்தராத்மாவுக்குத் தெரியும். அப்படியே நாம் தவறு செய்யாவிட்டாலும் கூட, அந்த மனிதன் அந்தச் சூழ்நிலையில் செய்த தவற்றை நாமும்கூட அந்த சூழ்நிலையில் இருந்தால் செய்திருக்கக் கூடும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

குரோதன் நம்முடைய பெரிய சத்ரு. அவனை அண்டவிடாமல் எப்போதும் நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**



# ஆட்சியில் அமர்வாரா ஆஸாத்?

* குலாம்நபி ஆசாத்

கூட்டணியில் பங்கேற்று ஆதரவு தந்துகொண்டிருந்த மக்கள் ஜனநாயகக் கட்சி பாதி வழியில் விடைபெற்றுக் கொண்டது. முதலமைச்சராய் இருந்த குலாம்நபி ஆசாத் ஆட்சியை ராஜினாமா செய்துவிட்டு வீட்டில் உட்கார்ந்திருக்கிறார்.

தேர்தலை நவம்பரில் எதிர்பார்க்கலாம். மன்மோகன் சிங், தேர்தல் ஆணையம் முடிவெடுக்கட்டும் என சிக்னல் காட்டிவிட்டார். சுதாரித்துக் கொண்ட காங்கிரஸ் அவசர அவசரமாக ஆலோசனைக் கூட்டம் நடத்திக் கொண்டிருக்கிறது.

ஜம்மு - காஷ்மீருக்கான காங்கிரஸ் பிரதிநிதியான பிரித்விராஜ் சோகன் முதன்முதலாக காஷ்மீரில் அடியெடுத்து வைத்திருக்கிறார்.

ஆஸாத் மீண்டும் ஆட்சியில் அமர்வாரா?

• • •

அமர்நாத் பிரச்னையை விடவும் ஜம்மு-காஷ்மீர் அதிகம் சிக்கித் தவிப்பது, மருந்துப் பொருட்கள் தட்டுப்பாட்டால்தான். பஞ்சாப் வழியாக ஜம்மு காஷ்மீருக்கு வந்துகொண்டிருந்த மருந்துப் பொருட்கள் முற்றிலுமாக நிறுத்தப்பட்டுவிட்டன.

ஸ்ரீ அமர்நாத் யாத்ரா சங்கர்ஷ் சமிதியின் அச்சுறுத்தல்தான் காரணமென்று காற்றுவாக்கில் செய்திகள் கசிகின்றன.

அறுவை சிகிச்சைக்குப் பயன்படுத்தும் கையுறைகள், பஞ்சு, வலி நிவாரணிகள் போன்ற அத்தியாவசியப் பொருட்களும்கூட இல்லவே இல்லை என்ற நிலையில், காஷ்மீர் மருத்துவத்துறை கதிகலங்கிப் போயிருக்கிறது.

மத்திய அரசு மனம்வைத்து மும்பையிலிருந்தும் டெல்லியிலிருந்தும் மருந்துப் பொருட்களை நேரடியாகவே விமா



ணம் மூலமாகக் கொடுத்திருக்கிறது. மருந்துப் பொருள் தயாரிப்பு நிறுவன மான லூபின் பெரிய மனதுடன் உதவ முன்வந்திருக்கிறது.

• • •

ரம்ஜான் மாதம் பிறந்துவிட்டாலே, காஷ்மீர் சந்தைகளில் ஊறுகாய்தான் சூப்பர் ஸ்டார்.

நோன்பு காலத்தில், ஊறுகாய் அதிகம் பயன்படுத்தப்படுவதால் சின்ன பெட்டிக் கடைகளில்கூட பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் நடக்கிறது.

ஊறுகாயில் அப்படி என்ன விசேஷம்?

மொத்தம் நூறு வெரைட்டிகளுக்கு மேல்! 'காஷ்மீரின் ஊறுகாய் மனிதர்' என்று அழைக்கப்படுகிற காஜி குலாம் காதிர் சுனு என்பவர் மீன், சிக்கன் மற்றும் பல கறி வகைகளிலிருந்து ஊறுகாய் தயாரித்து மார்க்கெட்டைக் கலக்கிக் கொண்டிருக்கிறார்.

மீன் ஊறுகாய் கிலோ 250 ரூபாய். சிக்கன் ஊறுகாய் கிலோ 300 ரூபாய்.




✱கரீனா கபூர்

• • •

லடாக் பகுதியில் பனி மழை தீவிரமாகியிருப்பதால் அதிக வருத்தத்துக்கு ஆளானது கரீனாகபூர்தான். என்ன இது மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் என்று யோசிக்கிறீர்களா?

கரீனா கபூர் நடித்துக் கொண்டிருக்கும் 'த்ரீ இடியட்ஸ்' படத்தின் ஷூட்டிங் லடாக்கில் நடந்தது. கரீனாவின் பிறந்த நாளும் படப்பிடிப்பு நாளில் வர, அந்த நாளை மலையோரப் பின்னணியுடன் நண்பர் (?) சையஃப் அலிகானோடு சேர்ந்து கொண்டாட முடிவெடுத்திருந்தார்.

ஆனால் துரதிருஷ்டம்...

ஸ்ரீநகர் வரைக்கும் வந்த சையஃப் அலிகான் லடாக்கை நெருங்க முடியாமல் தட்பவெப்பம் தகராறு செய்துவிட்டது. அதனாலென்ன! கரினாவே ஸ்ரீநகர் சென்று கொண்டாட்டத்தைத் தொடங்கிவிட்டாராம்...

**- எஸ்.பி.என்.**

புனைபெயரில் எழுதும் எழுத்தாளர்கள் உண்டு; வாசகர் ஒருவர், புனைபெயரில் 'வாசித்துக்' கொண்டிருக்கிறார்!

''புனைபெயர் - சகாதேவன். இது என் அம்மா எனக்குச் சூட்டியது'' என்கிறார் விழுப்புரத்தில் ஓட்டல் நடத்தும் சங்கரநாராயணன்.

''ஐந்தாவதாகப் பிறந்த என்னிடம் என் தாயார் 'பஞ்சபாண்டவர்களில் கடைசியாகப் பிறந்த சகாதேவன் மாதிரிடா நீ. நிறையப் படி. ஞானத்தைத் தேடு' என்றார். அம்மாவும் புத்தகப் பிரியை.''



✱ சங்கர நாராயணன்

# வெந்ததும்

ஓட்டல் நிர்வாகத்தில் ஈடுபட்டிருந்தாலும், சங்கரநாராயணனுக்குப் புத்தகம் வாசிப்பதிலும் எழுத்தாளர்களைத் தேடிப் போய் சந்திப்பதிலும்தான் ஆர்வம்.

தகழியுடனான அனுபவங்களை நம்முடன் பகிர்ந்துகொண்டார்.

''தகழியின் கதைகள் என்றால் எனக்கு உயிர். திருவனந்தபுரத்துக்கு அருகில் குக்கிராமத்தில் வசித்த தகழியைத் தேடிக் கொண்டுபோய் அவருடன் சில நாட்கள் தங்கியிருந்தேன். அவர் ஜமீன்தார் பரம்பரை. புராதனமான திண்ணை வைத்த பழைய வீட்டில் வசித்தார். தகழி எப்போதும் வெற்றுடம்புடன் கைலியும் கையில் பீடியுமாகத்தான் காட்சி தருவார்.

'இந்த உலகில் எல்லா ஆத்மாக்களும் தான் கஷ்டப்படுகின்றன. இந்தக் கஷ்டங்களைத் தாண்டவும் தாங்கிக் கொள்ளவும் தான் நான் கதைகள் எழுதுகிறேன்' என்ற தகழியின் கருத்தை என்னால் மறக்க முடியாது.

அவ்வளவு பெரிய எழுத்தாளருக்கும் கூட, மனைவி தன்னை ஓர் எழுத்தாளனாக மதிக்கவேண்டும் என்ற ஆதங்கம் இருந்தது. நான் தகழியை ஆஹா ஓஹோ என்று புகழ்ந்துகொண்டிருந்தேன். தகழி புன்சிரிப்புடன், தேநீர் கொண்டு வந்த தன் மனைவியிடம், 'ஸார் பறஞ்சத நோக்கியோ?' என்றார் பெருமையுடன்.''

நல்ல புத்தகங்களைத் தேடி வாசிக்கும் சகாதேவனுக்கு எந்த ஊர்களில் என்ன உணவு ருசியாக இருக்கும் என்ற தகவல்களும் அத்துப்படி.

''சங்ககரன்கோவில் பூரிக்கிழங்கு பிரசித்தம். 'ஹிந்து பேப்பரைக் கிழித்து அப்படியே பூரிக்கிழங்கைத் தொட்டுக்

கொண்டு சாப்பிடலாம்!' என்று ரஸிகமணி டி.கே.சி. சொல்லுவார். கேரளாவில் திருப்புணித்துறா என்ற இடத்தில் உள்ள உடுப்பி ஓட்டல் மசால் தோசை பிரமாத மாக இருக்கும். குற்றாலத்தில் இட்லி சாப்பிடணுமானால் பிள்ளைவாள் கடை யில்தான் சாப்பிட வேண்டும். இட்லிக்குத் தொட்டுக்கொள்ள எள்ளுப் பொடி வைப் பார்கள். சுத்தமான செக்கு எண்ணெய் விடு வார்கள்... ஆஹா என்ன ருசி...''

''புத்தக ருசி, சாப்பாட்டு ருசியை விட உயர்ந்ததுதானே?''

''அப்படியெல்லாம் இல்லை. ருசியில் பேதமில்லை. பதார்த்தங்களின் ருசி பற்றி ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னதைச் சொல்கிறேன் : அதம உணவு வயிற்றை அடைந்து கழிவுப்பொருளாக வெளியேறி விடும். ரத்தத்தில் சத்தாகச் சேர்வது மத்தி மம். சிலவகை உணவின் ருசி அப்படியே ஆத்மாவில் ஒட்டிக்கொண்டுவிடும். இதுவே உத்தமமான உணவு. இதைப் பற்றி வேதத்திலும் சொல்லியிருக்கிறது...''

''யாருடைய கதைகளை விரும்பி வாசிப்பீர்கள் சகாதேவன்?''

''நீல.பத்மநாபன், ஜெயகாந்தன், மேலாண்மை பொன்னுச்சாமி, மறைந்த எழுத்தாளர் ஸி.ஆர்.ராஜம்மாவின் கதை களை விரும்பி வாசிப்பேன். அவர் கடைசி வரை மாவாட்டிதான் ஜீவனம் செய்தார் தெரியுமோ?''

இதைச் சொல்லும்போது அவர் குரல் கரகரத்தது.

''புத்தக வாசிப்பு பெருகும்போது தனி மனிதப் பண்புகளும் செம்மையுறும்'' என்று சொல்லும் சகாதேவன் ஓட்டல் தொழி லில் தாம்பெற்ற சுவாரஸ்யமான அனு பவங்களைப் புத்தகமாக எழுதி வருகிறார். தலைப்பு - ''வெந்ததும் வேகாததும்!''




# வேகாததும்!

**- கிருஷ்ணகாந்த்** படம் : **ஷர்மிளா**

## உடையழகி நம்பர் ஒன்!

அரசியல் தலைவர்களின் கூடவே அவர்களது இல்லத்தரசிகளும் பிரபலமாகிவிடுகிறார்கள்.

இப்போது வெளிச்சம் விழுந்திருப்பது பாரக் ஒபாமாவின் மனைவி மைக்கேலின் மீது.

சிறப்பாக உடையணியும் பத்து பெண்களின் பட்டியலில், இவருக்கு முதலிடம் கொடுத்திருக்கிறது பீபிள் பத்திரிகை.



தன்னம்பிக்கைத் தெளிவும் ஒளி துலங்கும் அழகும் கொண்டவர் மைக்கேல்!

ஒபாமா வெற்றி பெற்றுவிடுவார். ஆனால், அவரை எதிர்த்து நிற்கும் மெக்னைனுக்கு ஸ்பெயின் எங்கிருக்கிறது என்று கூடவா தெரியாது?

இப்போதைய ஜனாதிபதியான புஷ் தன்னுடைய தேர்தல் பிரசாரத்தில் 'கிரீன்லாந்து ஒரு கண்டம்' என்றார். வெற்றியும் பெற்றுவிட்டார்.

இந்தத் தடவை அந்த சென்டிமெண்ட் காலை வாரிவிட்டது.

## நீதிமன்றத்தில் உடைகள்!

பின்புறம் உள்ளாடை தெரிய, பேக்கி பேண்ட்டை லூசாக அணிந்து திரிவது அமெரிக்காவில் தண்டனைக்குரிய குற்றம்.

கடந்தவாரம் ரிவேரா பீச்சில், உற்சாகமாக உலாத்திக்கொண்டிருந்த பதினோரு வயது இளைஞனை, காவல்துறை கைது செய்தது. காரணம் அணிந்திருந்த ஆடை ஈர்ப்பு விசையின் காரணமாக கீழே இறங்கி இருந்ததுதான்.

ஃப்ளோரிடாவில் ஐயாயிரம் பேரிடம் கையெழுத்து வேட்டை நடத்தி இடையோடு போராடும் உடைகளைத் தடை செய்திருக்கிறார்கள். எனவே நூற்றைம்பது டாலர் அபராதம் அல்லது கட்டாய சமூகச் சேவை, இரண்டில் ஒன்றை அனுபவித்தே ஆக வேண்டும் என்ற நிலை.

இளைஞனுக்காக நீதிமன்றத்தில் ஆஜரான வக்கீல், 'இது அரசியல் சாசனத்துக்கு எதிரானது. ஆடை அணிவது அவரவர் சுதந்திரம்' என்று பொரிந்து தள்ள, நீதிபதியும் அதை ஏற்றுக்கொண்டு விடுதலை செய்துவிட்டார்.

மற்ற மாகாணங்களில் வசிக்கும் இளைஞர்கள்தான் நொந்து போயிருக்கிறார்கள்.

* ஒபாமா, மைக்கேல்...



## தலைவர் பொம்மைகள்

தேர்தல் என்றவுடன் பத்திரிகைகளும் சேனல்களும் போட்டி போட்டுக்கொண்டு கருத்துக்கணிப்பு சொல்ல ஆரம்பித்து விடும். நியூஸிலாந்தில் நடக்க இருக்கிற பொதுத் தேர்தலில், செல்ல மிருகங்களுக்கு உணவு தயாரிக்கும் 'மாஸ்டர் பெட்' நிறுவனம், கணிப்பு சொல்ல முன்வந்ததுதான் அனை வருக்கும் அதிர்ச்சி.

பதவியில் இருக்கும் தொழிலாளர் கட் சித் தலைவர்களான ஹெலன், கிளார்க், எதிர்க்கட்சித் தலைவர் ஜான் கே மூவரது பொம்மைகளையும் விற்பனைக்கு விடப் போகிறது அந்நிறுவனம். எதற்கு என்று யோசிக்கிறீர்களா?

நாய்கள் விளையாடத்தான். பொம்மை களின் விற்பனையைப் பொறுத்து முடிவு அறிவிக்கப்படும்.



# மிக்கி மௌஸுக்குத் தடா!



* கிளார்க்

## மிக்கி மௌஸுக்குத் தடா!

மிக்கி மௌஸ் என்றதும் குழந்தைகள் மட்டுமின்றி வயோதி கர்களுக்கும்கூட உடனடி உற்சாகம் ஒட்டிக்கொள்ளும். ஆனால், எகிப்து நாட்டைச் சேர்ந்த இஸ்லா மிய அறிஞரான ஷேக் முகம்மது அல் முனாஜித் என்பவருக்கு மட் டும் இது வயிற்றெரிச்சலைக் கொடுக்கிறது.

அடிக்கடி சவுதி தொலைக் காட்சிகளில் தோன்றி 'எலி என்பது சாத்தானின் வடிவம். அனைத்து எலிகளையும் அழிக்கவேண்டும் என்று ஷரியத் சட்டம் கூறுகிறது. அதில் மிக்க மௌஸும்கூட சேர்த் துக் கொள்ளப்பட வேண்டும்' என்று அறைகூவல் விடுத்திருக்கிறார்.

\- ஸாந்த்



ஸ்ரீ(ம்)லீக்ஸ்

# 'செஞ்சி' ரகசியம்

• தொழிலாளர் நலத்துறை அமைச்சரும், காஞ்சி மாவட்ட தி.மு.க. செயலருமான தா.மோ.அன்பரசனுக்கும், மத்திய அமைச்சர் டி.ஆர்.பாலுவுக்கும் நெடுங்காலமாக பனிப்போர். ஒரு கூட்டத்தில் கருணாநிதி பேசும்போது, ''இருவருமே என் உடன்பிறப்புகள்தான்'' என்று உரசலுக்கு முற்றுப்புள்ளி வைக்க முயற்சி செய்தார். ஊரப்பாக்கம் பஞ்சாயத்துத் தலைவர் குமார், கொலை வழக்கில் மாட்டிக் கொண்டபோது, 'அவரை உடனடியாகக் கைது செய்ய முடியாதபடி அன்பரசன் பாதுகாப்பு கொடுத்தார்' என்று பாலு ஆதரவாளர்கள் மீடியாக்களுக்குப் பற்ற வைத்தார்கள். சில நாட்களுக்கு முன்னர் அன்பரசனும், அவரது தனி உதவியாளரும், ஒரே நேரத்தில் அப்பல்லோவில் அட்மிட் ஆனார்கள். இப்போது காஞ்சியில் இருக்கும் பாலுவின் ஆதரவாளர்கள் ''திருமுக்கூடல் பகுதியில் (வாலாஜா அருகில்) மணல் கடத்தல்காரர்களுடன் நடந்த 'விவகாரத்தில்' அவர்கள் தாக்கப்பட்டார்கள்'' என்று கிளப்பி விட்டுக்கொண்டிருக்கிறார்கள். இது நாடாளுமன்றத் தேர்தலைப் பாதிக்காமல் இருந்தால் சரி?

• 'அவர்களுக்கு செய்யவேண்டிய 'மரியாதையை'ச் செய்துவிட்டோம். பாராளுமன்றத் தேர்தலில் ஸீட்டு எதிர்பார்த்தால் எப்படி?' என்று தி.மு.க. மேல் வட்டாரம் கேள்வி எழுப்பியதில் ஆடிப் போயிருக்கிறார்கள் எல்.கணேசனும், செஞ்சி ராமச்சந்திரனும். ஒரு லட்சம் தொண்டர்களுடன் தி.மு.க. வில் இணையப் போவதாகச் சொன்ன, எல்.ஜி.யும், செஞ்சியும் காசு கொடுத்தாலும் ஆட்கள் வரத் தயாராக இல்லை என்றபோது காற்றிறங்கிய பலூனாகி விட்டார்கள். இந்த நிலையில் செஞ்சி மட்டும் ரகசியமாக மீண்டும் வை.கோ. வீட்டுக் கதவைத் தட்டியிருக்கிறார்.

• சட்டமன்றத் தேர்தலில் தோற்று விட்டால் நாலரை வருடம் அறிக்கைகள் மட்டும் விட்டுக் கொண்டிருப்பார் ஜெ. தேர்தல் வரும்போதுதான், தோட்டத்தை விட்டு வெளியே வருவார். எம்.ஜி.ஆர். மீது திடீர் பாசம் காட்டுவார். பாராளுமன்றத் தேர்தல் வரும் நிலையில் இப்போது எம்.ஜி.ஆர். மீது ஈடுபாடு காட்டும் வகையில் ராசிபுரத்தில் எம்.ஜி.ஆர். சிலையைத் திறந்துவைக்கப் போகிறார் ஜெ. அந்தச் சிலை நிறுவ முயற்சி எடுத்தவர் நகரச் செயலாளராக இருந்த லட்சுமணன். நான்கு வருடமாக மூடப்பட்டு இருந்த சிலைக்கு விடிவு காலம் வந்திருக்கிறது. ''லட்சுமணன் இறந்துவிட்டார். ஆனால் அதற்கு முன் பல முறை ஜெ.வை அணுகி சிலை திறப்புக்கு வரச் சொன்னார். தலைமையிடமிருந்து பதிலில்லை. பெரிய வருத்தத்துடன்தான் லட்சுமணன் இறந்தார்'' என்கின்றனர் ராசிபுரம் அ.தி.மு.க. பிரமுகர்கள்.

– ஸ்ரீநி

# இப்படித்தான் வென்றார்கள்!









**புதிய உலகம், முத்து மீனாட்சி, பாரதி புத்தகாலயம், 421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018. ரூ. 35.00**

இந்திய இலக்கிய உலகின் தலைசிறந்த படைப்பாளிகள் சிலரின் சிறுகதைகளை மொழிபெயர்த்துத் தந்துள்ளார் ஆசிரியர். சுதந்திரத்தை முன்னிறுத்தி எழுதப்பட்ட, ஆறு ஆசிரியர்களின் ஒன்பது கதைகள் இந் நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. சுதந்திரத் துக்கு முந்தைய காலகட்டத்தில் எழுதப் பட்டிருந்தாலும், இன்றைய சமூகச் சூழ லுக்கான தேவைகளாகவும் இக்கதைகள் உள்ளன. இந்திய இலக்கிய உலகை அறிந்துகொள்ள உதவும் முக்கியக் கருவி களுள் இந்தக் கதைகளுக்கும் இடமுண்டு.

**புகழ்பெற்ற இந்தியக் கோயில்கள், காஷ்யபன், தங்கத் தாமரைப் பதிப்பகம், 37, கால்வாய்க்கரை சாலை, கஸ்தூரிபா நகர், அடையாறு, சென்னை - 600 020. ரூ. 65.00**

பாரதத்தின் புகழ்பெற்ற பன்னிரண்டு கோயில்களின் காவிய, ஓவியங்கள் இடம்பெற்றுள்ள நூல். ஆலயங்களின் பூர்வீக வரலாறுகள், சிறப்புகள் போன்றவற் றைக் கதைப்பாங்கில் கூறிச் செல்கிறார், ஆசிரியர். நமது பண்பாடு, கலைகள் ஆகியவற்றின் குறியீடுகளாகத் திகழ்பவை ஆலயங்கள். அதனைச் சிறப்பாக வெளிப் படுத்தும்விதத்தில் அமைந்த ஜெ. பிரபா கரின் ஓவியங்கள் நூலுக்கு எழில்கூட்டு கின்றன.

**நோபல் வெற்றியாளர்கள், கொரட்டூர் கே.என். ஸ்ரீனிவாஸ், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. ரூ. 60.00**

1901 முதல் 1950 வரை இயற்பியலுக் கான நோபல் பரிசு பெற்றவர்களின் சாதனைத் துளிகளை இந்நூல் தொகுத்துத் தந்துள்ளது. நூலில் 44 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கட்டுரையிலும் முன்னுரையாக, சாதனையாளர்களின் வாழ்க்கை நிகழ்வுகளை, கதைப்பாங்கில் விவரித்திருப்பது சுவாரஸ்யம். அரிய புகைப்படங்களைப் பொருத்தமான இடங் களில் பயன்படுத்தியிருப்பது ஆர்வ மேற்படுத்துகிறது. 'இப்படித்தான் வென் றார்கள்' என சாதனையாளர்களின் ஆய்வு முயற்சிகள், தோல்விகள், போராட்டங்கள் யாவற்றையும் விவரித்திருப்பது, மாணவர் கள் மற்றும் இளம் விஞ்ஞானிகளுக்குத் தூண்டுகோலாக அமையும்.

**- நேயமுகில்**

# உலக நாயகன்!







உலக நாயகன், ஆஸ்கார் நாயகன் என்கிற வாழ்த்துகள், அலங்காரங்கள் எதுவுமின்றி சப்தமில்லாமல் சாதித்துக் கொண்டிருக்கிறார் ஆமீர் கான்.

கடந்த ஏழு வருடங்களில் ஆமீர் கானுடைய மூன்று படங்கள், இந்தியா சார்பாக ஆஸ்காருக்கு அனுப்பப்பட்டுள்ளன. 2001ல் இந்தியா சார்பாகச் சென்ற 'லகான்' சிறந்த ஐந்து வேற்று மொழிப் படங்களில் ஒன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இறுதிச் சுற்றில் தோல்வி கண்டது. 2006ல் 'ரங் தே பசந்தி' இந்தியா சார்பாகத் தேர்வானது. இதோ ஆமீர் கானின் இன்னொரு படம், 'தாரே ஜமீன் பர்' இந்தியாவின் 2008-ம் ஆண்டுக்கான ஆஸ்கார் பிரதிநிதி.

அமீர்கானைப் பார்த்தால் பொறாமையாக இருக்கிறது. என்ன ஒரு ரசனை! என்ன ஒரு தேடல்! என்ன ஓர் ஆளுமை! ஆமீர் கான் தயாரித்து சமீபத்தில் வெளிவந்த Jaane Tu Ya Jaane Na என்கிற இளமையான படம் பெரிய வெற்றி பெற்றிருக்கிறது. இன்னொரு பக்கம் 'தாரே ஜமீன் பர்'க்கு உலகளாவிய பாராட்டுகள். தமிழ் சினிமாவிலிருந்து முருகதாஸையும் அஸினையும் மும்பைக்கு அழைத்துச் சென்று, மாபெரும் இந்திப் படம் ஒன்றைத் தயாரிக்கும் துணிச்சல்.

தாரே ஜமீன் பர்-க்குப் போட்டியாக Entre Les Murs (France), Turneja (Serbia), Freund Der (Switzerland), Perro Come Perro (Colombia), No one's Son (Croatia), Home of Dark Butterflies (Finland), El Dorado (Belgium), Revanche (Austria), Sztuczki (Poland) Iszka Utaz (Hungary) போன்ற படங்கள், சிறந்த வெளி நாட்டுப் படத்துக்கான ஆஸ்கார் விருதை வாங்கிச் செல்ல மல்லுக்கு நிற்கின்றன. சென்ற முறை 'நோ மேன்ஸ் லேண்ட்' படத்திடம் தோல்வி கண்டது லகான். இப்போது போலந்து நாட்டுப் படமான Sztuczki ஆஸ்கார் விருதைத் தட்டிச் செல்லும் என்று கணிக்கப்படுகிறது. இதற்கு முன்னால் சலாம் பாம்பே, மதர் இந்தியா, லகான் ஆகிய படங்கள் ஆஸ்கார் டாப் ஃபைவ் பட்டியலில் இடம்பெற்றன. இந்த உயரம் தொட அடுத்தடுத்த ரவுண்டுகளை ஆமீர் கானும், 'தாரே ஜமீன் பர்'ரும் கடக்க வேண்டியிருக்கும். ஆஸ்கார் விருதுதான் ஒரு படத்தின் தரத்தை நிர்ணயிக்கும் சக்தி என்பதல்ல. அதே சமயம் மற்ற நாட்டுப் படங்களுக்கு இணையாகப் போட்டியிடுவது என்பது எத்தனை பெரிய சவால்! உலக சினிமாவில் இந்திய சினிமாவை நிறுத்துவதற்கு எவ்வளவு பெரிய வாய்ப்பு!

– நிலாவள்ளி

# செஸ் சாம்பியன் சோகம்!

எட்டு வயதில் செஸ் விளை யாடக் கற்றுக்கொண்ட ஜெனித் தாவுக்கு இப்போது வயது இரு பத்தியொன்று. மூன்று வயதில் போலியோ அட்டாக் ஆன இவர், மாநில மற்றும் தேசிய அளவில் செஸ் போட்டிகளில் பல பரிசு களைப் பெற்றிருக்கிறார். 2008 நவம்பர் 11 முதல் 25 வரை ஜெர்மனியில் நடைபெறவுள்ள Chess Olympiad சர்வதேச செஸ் போட்டிகளிலும் பங்கேற்க உள் ளார். உடல் ஊனமுற்ற நான்கு பேர் பங்கேற்கும் அந்தப் போட் டியில், இந்தியப் பெண் இவர் ஒருவர் மட்டுமே. அப்போட் டிக்குச் சென்றுவர அவருக்கு இரண்டு லட்ச ரூபாய் தேவை.

''அப்போது நான் நடுநிலைப்பள்ளி ஆசிரியர். 'Will of Steel' என்கிற தலைப்பில் பாடம் நடத்திக்கொண்டிருந்தபோது நானே அதிலிருந்து பாடம் கற்றேன். போலியோவால் பாதிக்கப்பட்ட நம்முடைய ஸ்பின் பௌலர் சந்திரசேகர் உட்பட, உலக அளவில் உடல் ஊனமுற்ற விளையாட்டு வீரர்களின் வெற்றிக் கதை அது. நம் வீட்டிலும் போலியோ பாதித்த நம் மகள் ஒருத்தி இருக்கிறாளே! அவ ளுக்கு செஸ் கற்றுத்தந்தால் என்ன என்கிற உந்துதல் எனக்குள் தோன்றியது. ஜெனித்தா வின் எட்டு வயதில் அவளுக்கு செஸ் கற்றுத் தந்தேன். தற்போது அவள் சர்வதேச அளவிலான Chess Olympiad போட்டிகளில் பங்கேற்க இருக்கிறாள். நான் எண்ணியிராத உலக அளவிலான எட்டாத உயரத்தை எட்டிப் பிடிக்கப் போகிறாள்!'' என்கிறார் ஜெனித்தா வின் தந்தை காணிக்கை இருதயராஜ்.

எட்டு வயதில் செஸ் கற்றுக்கொள்ளத் துவங்கிய அந்த வருடமே மாவட்ட செஸ் போட்டியில் முதல் பரிசு. திருச்சி கேம்பியன் பள்ளியில் ஒவ்வொரு ஆண்டும் மாவட்ட அளவிலான செஸ் போட்டி நடைபெறும். அதில் ஜெனித்தா, தொடர்ந்து ஆறு ஆண்டு களாக முதல் பரிசு பெற்றுள்ளார்.

''என்ன ஜெனி? தொடர்ந்து ஆறு வருசமா நீயே முதல் பரிசு தட்டிக்கிட்டுப் போனா,

✱ ஜெனித்தா





# ஜெர்மனி போவாரா ஜெனி?

போது அஞ்சல் வழிக்கல்வி வாயிலாக பி.காம் இறுதியாண்டு.

மாநில அளவில் செஸ் விளையாட்டுப் போட்டிகளில் மூன்று முறை மூன்றாமிடம், அகில இந்தியப் போட்டிகளில் மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து முதல் இருபது இடங்களுக்குள். 2007ல் போலந்து நாட்டில் உலக அளவிலான உடல் ஊனமுற்றோர் செஸ் போட்டியில் உலக அளவில் இரண்டாம் பரிசு. இந்த வெற்றியே, ஜெர்மனியில் நடைபெறவுள்ள Chess Olympiadல் பங்கேற்கும் வாய்ப்பினைப் பெற்றுத் தந்துள்ளது.

''இப்போட்டியில் கலந்துகொள்ள நானும், எனக்குத் துணையாக என் அப்பாவும் ஜெர்மனி சென்று வர இரண்டு லட்ச ரூபாய் பணம் தேவைப் படுகிறது. போட்டியில் பங்கேற்றால் நிச்சயம் வுமன் இன்டர்நேஷனல் மாஸ்டர் பட்டம் எனக்குத்தான். வீட்டுப் பொருளாதாரம்தான் எனக்குப் பெரும் சவாலாக உள்ளது. திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர், மாவட்ட நலப்பணிகள் நிதியிலிருந்து இருபத்தைந்தாயிரம் ரூபாய் நிதியுதவி அளித்துள்ளார். அகில இந்திய செஸ் ஃபெடரேஷன் எனக்குப் பத்தாயிரம் ரூபாய் நிதியுதவி செய்திட முன் வந்துள்ளது. என் நிலையறிந்து, தமிழக அரசு உதவி செய்தால் எனக்கு மிகுந்த உற்சாகமாக அமையும்'' என்கிறார் ஜெனித்தா ஆன்ட்டோ.

மத்தவங்க யாரும் முதல் பரிசு வாங்க வேணாமான்னு பலரும் என் கிட்ட கேட்டாங்க. எனக்கு அது என்னவோ போல் ஆகிவிட்டது. கேம்பியன் ஸ்கூல் போட்டிகள்ல இருந்து மூணு வருஷம் ஒதுங்கியிருந்தேன். அந்தப் போட்டிகள்தான் மாநில மற்றும் தேசிய அளவிலான போட்டிகளில் பங்கேற்க எனக்குத் தூண்டுதலாக அமைந்தன!'' என்கிறார்.

தனிப் பயிற்சியில் ப்ளஸ் டு பொதுத்தேர்வில் தேர்ச்சி. தற்

செய்தியும், சித்திரங்களும்:

**புதியவன்**

'பொய் சொல்லப் போறோம்' கதாநாயகி பியா, தான் கதாநாயகியாக நடித்த முதல் படமே அரங்கு நிறைந்த காட்சிகளாகச் செல்வதைக் கண்டு, பேச்சு மூச்சில்லாமல் இருக்கிறார். தன்னை ஆசுவாசப்படுத்திக்கொண்டு இங்கே கொஞ்சம் நிஜம் பேசுகிறார்...

இந்த வெற்றியை எதிர்பார்த்திங்களா?

''நிச்சயமா இல்லை. புதுமுகங்கள் நடிச்ச படம்தான் 'பொய் சொல்லப் போறோம்.' ஆனா முதல்நாளிலிருந்து ஹவுஸ்ஃபுல்லா போறது எங்களுக்கே இன்ப அதிர்ச்சி. நான் இதுவரை ரசிகர்களோடு உட்கார்ந்து ஆறுமுறை படம் பார்த்துட்டேன். கைதட்டறாங்க. விசில் அடிக்கறாங்க... அப்பப்பா... அவங்க எல்லோரும் எப்படி படத்தை ரசிக்கிறாங்க! எங்க வீட்ல எல்லாரும் கொண்டாட்டமா இருக்கோம். மத்தியப் பிரதேசத்துல பிறந்து வளர்ந்த நான் தமிழ் சினிமாவுல அறிமுகமாகி ஜெயிப்பேன்னு நினைச்சுக்கூட பார்க்கலை. என்னை அடுத்த கஜோல்னு பாராட்டிப்

# கிராமத்து

பேசறதெல்லாம் கேக்கறதுக்கு நல்லாயிருக்கு. நான் இதுக்கு முன்னாடி விளம்பரங்கள்ல மட்டும்தான் நடிச்சிருக்கேன். முப்பது நொடியில வர்ற விஷுவல்லேயே எனக்கு நல்ல பேர் கிடைச்சுது. இப்போ சினிமாவும் எனக்கு சாதகமாத்தான் இருக்கு.

மத்தியப் பிரதேசத்திலிருக்கிற ஒரு கிராமத்திலிருந்து வந்தவள் நான். என் கதையை வெச்சே ஒரு சினிமா

எடுக்கலாம். எங்க ஊர்ல பொண்ணுங்க இரவு எட்டு மணிக்கு மேல நடமாட மாட்டோம். எங்களுடையது ரொம்பக் கட்டுப்பட்டியான குடும்பம். என் அக்காக்களும் அரசாங்க வேலைகள்லதான் இருக்காங்க. ஆனா நாலு சுவத்துக்குள்ள வாழற வாழ்க்கையை நான் வாழ விரும்பலை. என் கனவு ரொம்பப் பெரிசா இருந்துச்சு. ஸ்கூல்ல நிறைய நாடகங்கள்ல நடிச்சிருக்கேன். சினிமா நடிகை



# கஜோல்!

களோட பேட்டி பார்க்கும்போது ரொம்ப ஆர்வமா படிப்பேன். அவங்கதான் எனக்குப் புது உலகத்தைக் காண்பிச்சாங்க. என் தோழிகள் வேற எனக்கு நடிப்புத் திறமை இருக்கறதா என்னை மேலும் ஏத்திவிட்டாங்க. ஒருநாள் தைரியமா என் ஆசையை வீட்டுல சொன்னேன். நான் சினிமாவுல நடிக்க ஆசைப்படறதைத் தெரிஞ்சு வீட்டுல தையத்தக்கானு குதிச்சாங்க. கடைசியில என் பிடிவாதத்தைப் பார்த்து ஓ.கே. சொன்னாங்க. அதுவும் போன வேகத்துல வந்துடுவானுதான் நினைச்சாங்க. ஆனா, அவங்க கொடுத்த அவகாசத்துல நான் மும்பைக்குப் போய் என்னை மேலும் வளர்த்துக்கிட்டேன். நல்ல நல்ல விளம்பர வாய்ப்புகள் வந்துச்சு. அப்பவே எனக்கு நிறைய தமிழ்ப் பட வாய்ப்புகள் வந்தாலும் ஒத்துக்க பயமா இருந்துச்சு. புரியாத மொழி, தெரியாத ஊர். ஆனால், பிரியதர்ஷன் ஸார் கூப்பிட்ட போது பயம் எல்லாம் ஓடிப்போயிடுச்சு.

'பொய் சொல்லப் போறோம்' டெஸ்டுக்காக வந்தபோது எனக்கு பக்குன்னு ஆயிடுச்சு. நான் மேக்-அப் எதுவும் இல்லாமதான் வந்தேன். ஆனால், தேர்வுக்கு வந்திருந்த எல்லா மாடல்களும் பார்க்கவே பளபளன்னு இருந்தாங்க. போச்சுடானு நினைச்சப்போ என் எளிமையே பெரிய பலமா இருந்து என்னைப் படத்தோட ஹீரோயினா ஆக்கிடுச்சு.''

'ஏகன்'-னில் அஜீத்துடன் நடிப்பது பற்றிக் கேட்டால், ''சான்ஸே இல்லை. ஒரு நடிகர் இவ்வளவு எளிமையாகவும் அன்பாகவும் இருப்பார்னு இப்பதான் தெரிஞ்சுகிட்டேன். ஏகன்ல நானும் நயன்தாராவும் நடிச்சாலும் ஹீரோயின்னு அதுல யாரும் கிடையாது. கதைதான் ஹீரோ, ஹீரோயின் எல்லாம். 'பொய் சொல்லப் போறாம்'லகூட அந்தப் படத்தோட கதாபாத்திரங்கள்தான் படத்தைத் தாங்குச்சு. நான் ஹீரோயினா இல்லையாங்கிறது முக்கியமில்லை. நான் இருக்கறதால மட்டும் எந்தப் படமும் ஓடிடாது. நல்ல கதையுள்ள படங்கள்தான் இப்போ எனக்கு முக்கியம்'' என்கிறார்.

– செந்தில்

# கிரேஸியைக் கேளுங்கள்



## எதில் அழகு?

● பி.சிவா, பாளையங்கோட்டை

*பூக்கள் செடியில் இருக்கும்போது அழகா... பெண்களின் கூந்தலில் இருக்கும்போது அழகா...?*

பூவுக்குப் பிறந்த வீடு, அதாவது 'பூக்ககம்' செடி. புகுந்த வீடு அதாவது 'புக்ககம்' பெண்ணின் கூந்தல். 'செடி கொடுத்த பூவை'விட, ஆண்டாள் என்ற ஒரு பெண் 'சூடிக்கொடுத்த பூவை'யே அரங்கன் ஏற்றுக் கொண்டான். அதனால் செடி சாதாரணமாகிவிடாது. தான் பூவை இழந்து, சூடும் பெண்ணுக்குச் சுமங்கலி என்ற அழகைத் தரும் தியாகி செடி.

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்க வயல்

*பிரம்மச்சாரி சரி... அது என்ன கட்ட பிரம்மச்சாரி...?*

உடலளவு பிரம்மச்சாரியாக இருப்பது ஒன்று. அதையும் தாண்டி புனிதமாக, உள்ளத்தளவும் பிரம்மச்சாரியாக இருப்பவனே, அடுத்த கட்ட பிரம்மச்சாரி.

● வைஜயந்தி, டெல்லி

*உங்களுக்குப் பிடித்த கேள்வி - பதில் பகுதி எது?*

அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்குக் கண்ணன் கூறிய பதில்கள்.

● பாலகிருஷ்ணன், மதுரை

*நவராத்திரியில் 'கொலு' வைப்பதன் தாத்பர்யம் என்ன...?*

வழக்கமாக கொலுவின் முதல்படியில் போலீஸ்காரர், பஃபூன், மளிகைக் கடைக்காரர், ராஜா, ராணி போன்ற மனித பொம்மைகள் வைக்கப்படும். அடுத்த படியில் காந்திஜி, நேருஜி, ராஜாஜி போன்ற தேசியத் தலைவர்கள் பொம்மைகள் வைக்கப்படும். அதற்கும் மேல் படியில் பரமஹம்சர், விவேகானந்தர், ரமணர், பாரதியார், போன்ற மகான்களின் உருவ பொம்மைகள் இடம் பெறும். உச்சிப் படியில் ராமர், கிருஷ்ணர், அம்பாள், பிள்ளையார் போன்ற தெய்வ பொம்மைகள் கொலுவிருக்கும். படிப்படியாகத் தனி மனிதன் வளர்ந்து தேசியமாய்ப் பரந்து, மகானாய் முன்னேறி, தெய்வமாய்த் திகழும் பரிணாம வளர்ச்சியை நமக்குப் படிப்பினையாகக் காட்டுவதே 'கொலுவின்' தாத்பர்யம்.

● என்.கோமதி, நெல்லை

*? வினையாக ஆரம்பித்து விளையாட்டாக நிகழ்ந்த சம்பவம் எது?*

'சம்பவாமி யுகே யுகே' என்று சூளுரைத்த கண்ணன் அவதாரம். கம்ச-சிசுபாலர்களை அழிக்கவேண்டும், பூ-பாரம் போக்கவேண்டும் என்றெல்லாம் வினையாக ஆரம்பித்து, வெண்ணை திருடியது, மண்ணை உண்டது, மாடு மேய்த்தது, ராச-லீலை என நம்மில் ஒருவனாக வாழ்ந்த கண்ணனே 'தீராத விளையாட்டுப் பிள்ளை.'

● ஆர்.கோபாலன், மேற்குமாம்பலம்

*உறவுகள் மலர்கின்ற பூக்களா? இல்லை முறைக்கின்ற நவகிரகங்களா...?*

வாசமான உறவுகள் எட்ட இருந்

"என்னை மாதிரி கொடியில 'பூ' இருக்கறதுதான் 'அழகு'ன்னு சொல்றீங்க வெரிகுட் ஸார்!"

தாலும், மணம் வீசும் 'பூக்கள்'... தோஷமான உறவுகள் நம்மைச் சுற்றிவந்து சாவடிக்கும் 'கிரகசாரங்கள்!'

**• த. சத்தியநாராயணன், அயன்புரம்**

**உமக்குப் பறக்கும் சக்தி கிடைத்தால்...?**

சந்தோஷத்தில் தரையில் கால் பாவாது...!

**• எடக்காடு பீ.சேகர், ஊட்டி**

**நீங்க 'ஆல்வேஸ் வெஜ்ஜா', இல்ல ஆபத்துக்கு பாதகமில் லேன்னு 'நான்-வெஜ்' சாப்பிடுவதுண்டா...?**

இந்தப் புல் பசித்தாலும், புலியைத் தின்னாது.

**• ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி**

**கிரேஸி ஸார், ஆறுவது சினம் என்றால் சூடு ஏற்றப்பட வேண்டியது எது?**

அஞ்சுவது. பாரதியார் சொன்னது போல ரெளத்திரம் பழகி சூடேற்றிக் கொண்டு அஞ்சுவது தவிர். சூடு அதிகமாகி சினமானால் ஆறுவது தவறேல்! ○

# அம்பாளின் ஆத்மானந்தம்

சுதா சேஷய்யன்

தினப்படி வாழ்க்கையில் நாம் பேசும் போது, ஏதாவது ஒரு வார்த்தையைச் சொல்லிவிட்டு, அதற்கு, 'மேலோட்டமாக இதுதான் அர்த்தம்; ஆனால், உள்ளுக்குள்ளே அர்த்தம் வேறு' என்று வேறுபடுத்திச் சொல்வோம். மேலோட்டமாகப் பார்க்கக்கூடிய அர்த்தத்துக்கு வாக்யார்த்தம் என்று பெயர். அந்த வாக்குக்கு ஒரு லட்சியம் இருக்குமே, அந்த லட்சியத்தைச் சொல்லும் பொருள்தான் லக்ஷ்யார்த்தம். எந்தச் சொல்லுக்குமே நாம் இரண்டு அர்த்தங்களையும் புரிந்துகொள்ள வேண்டும்.

தத்வமஸி என்றொரு வாக்கியம் உண்டு. பின்னால், ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமத்தில், 'தத்வமயி' என்று அம்பாளுக்கு ஒரு திருநாமம் வரும். இரண்டு இடங்களிலே இந்த நாமம் வரும். அதனால் பாஷ்யம் சொல்கிறபோது, பின்னால் வரக்கூடிய 'தத்வமயி'யை தத்-த்வம்-அயி என்று மூன்று நாமாக்களாகப் பிரிப்பதுண்டு. இதே திருநாமம், நாமாவளியாக வருகிறபோது, தஸ்யை நம: என்று வரும். தஸ்யை நம: அய் யை நம: என்று விரியும். இந்த 'ஐயி' என்கிற பதம் மிகவும் உரிமையுடன் அழைக்கிற விளி. ஆசார்யர் ஆதி சங்கரர் 'அமீ!' என்று அம்பாளை அழைத்ததுபோல!

இந்த 'தத்வமஸி' என்பதை எடுத்துக் கொண்டால், வாக்யார்த்தமாக, உலகத்தில் - கண்டத்தில் நாம் பார்க்கக்கூடிய எல்லா ரூபங்களாகவும் - பலவிதமான வடிவங்களாக இருக்கக்கூடியது.

மாணிக்கவாசகர் சொன்ன மாதிரி,

அண்டப் பகுதியின் உண்டைப்
பிறக்கம்
அளப்பரும் தன்மை வளப்பெருங்
காட்சி
ஒன்றனுக்கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட
விரிந்தன!

எத்தனையோ பகுதிகள் அண்டத்தில் இருக்கின்றன - ஒன்றுக்கு ஒன்று - இது அழகா, அது அழகா? என்று பார்த்துக் கொண்டே வருகிறபோது, அடுத்தது அதைவிட அழகாக அமைந்து இருக்கும்!

இப்படி, 'ஒன்றனுக்கொன்று நின்று எழில் பகரின்' எத்தனை இருக்கின்றன?! நூற்றியொரு கோடியைக் காட்டிலும் அதிகம்! பார்க்கப் பார்க்க, எண்ண எண்ண, வியக்க வியக்க விரிந்துகொண்டே போகிறது அண்டப் பகுதி. எல்லாவற்றையும் கணக்குப் போட்டால், எந்தக் கணக்கிலேயும் அதைக் கொண்டுபோய் நிறுத்த முடியாது - Infinity என்று சொல்கிற எல்லையற்ற, காலம் கடந்த தன்மையுடன் அவை வளர்கின்றன. - கண்ணுக்குத் தெரிந்தவை மட்டுமின்றி கண்ணுக்கே தெரியாதவையும் இவற்றிலே அடக்கம்.

இவை அத்தனையுமே பரமாத்மா ஸ்வரூபம்தான். பரமாத்மாவானது தன்னைப் பலவிதமாக வெளிப்படுத்திக் கொள்ள முற்படுகிறபோது சிருஷ்டியிலுள்ள அனைத்

ஸ்ரீ லலிதா

தும் உருவாகின்றன. செடியைப் பார்த்தால் அது பரமாத்மாதான்; மரமும் பரமாத்மா தான்.

இவ்வாறு அனைத்தையும் பரமாத்ம ஸ்வரூபமாகப் பார்க்கக்கூடிய தன்மையே தத். - இது வாக்யார்த்தம். இதற்கு லக்ஷ்யார்த்தம் என்னவென்றால், இந்தப் பரமாத்மாவின் வெளிப்பாடுதான் எல்லாம் என்று சொன்னால், அவை அனைத்திலும் அபின்னமாக, அபேதமாக - வேற்றுமையற்றதாக இருக்கக்கூடிய ஒரே விஷயமும் பரமாத்மாவே.

சுகபிரம்ம மகரிஷி நடந்து போகையில் செடி கொடிகளைப் பார்த்து, ''கடவுளே! கடவுளே!'' என்று கூப்பிட்டதாகவும், செடிகள், ''என்ன?'' என்று அவரைத் திருப்பிக் கேட்டது என்றும் பாகவதம் சொல்கிறது. அப்படியென்றால் எல்லாவற்றுக்குள்ளும் இருக்கக் கூடியது பரமாத்மாதானே!

இப்படி உள்உறை பொருளாக பரமாத்ம ஸ்வரூபம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் தன்மை - நமக்கு இதனை உணர்த்தும் தன்மைதான் 'தத்' என்கிற பதத்தின் லக்ஷ்யார்த்தம்.

இந்த லக்ஷ்யார்த்தத்தைப் புரிந்துகொண்டாயிற்று என்றால், என்ன கிட்டும்?

ரூப பேதமாக (பல்வேறு வடிவங்களாக) இருப்பதும் பரமாத்மா; அப்படி பேதப்படாமல் (வேற்றுமையே இன்றி) எல்லாவற்றுக்குள்ளும் உறைவதுடன், அத்தனையையும் கடந்து இருப்பதும் பரமாத்மா என்ற உண்மை கிட்டும். ஜீரோ டிகிரி என்கிற ஒரு புள்ளியிலிருந்து தொடங்கி 180 டிகிரி வரை கிழக்கு திசையில் சென்றால் அந்த 180 டிகிரி கிழக்கிலேயே 180 டிகிரி மேற்கும் இணைகிற மாதிரிதான் - ரூப பேதமும் பரமாத்மா; ரூப பேதமே இல்லாத அபேதமாக இருப்பதும் பரமாத்மா.

தத் பத லக்ஷ்யார்த்தாவான அம்பிகையே கண்ணுக்குத் தெரிகிற ரூபங்களாகவெல்லாம் இருக்கிறாள்; ரூபங்களைக் கடந்து அபின்னமாக, எல்லாவற்றையும் தாண்டி அபின்னமாகவும் இருக்கிறாள் என்றால், நிர்க்குணமாவும் இருக்கக்கூடியவள் அவள்தான் என்பதை உணர்த்துகிறது **தத்பதலக்ஷ்யார்த்தா** என்ற அழகான திருநாமம்.



## துளியும் கடலும்

இதற்கு அடுத்த திருநாமம் இன்னும் அழகு! அம்பாளுடைய ஆனந்தம் என்ன மாதிரியானது? சுய ஆனந்தத்தில் ஆழ்ந்திருக்கிறாள்.

**பரமாத்மா, தன்னைப்**

**சிருஷ்டியிலுள்ள**

**ஸ்வாத்மானந்த லவீ பூத** - லவி என்றால் மிகச் சிறிய என்று அர்த்தம் - ஒரு சின்னஞ் சிறு துளி. 'லவ லேசம்' என்று ஒரு பதம் உண்டு. துளிக்கூட என்பதற்குத்தான் லவ லேசம் என்று சொல்வது. 'லவி' என்பதிலிருந்து வந்ததே லவ லேசம்.

இந்தத் திருநாமம் முழுமையும் பார்த்தால் - **ஸ்வாத்மானந்த லவி பூத பிரம்மாத்யானந்த ஸந்ததி:** என்று நீண்டு அமைந்திருக்கிறது.

பிரம்மா, சிருஷ்டிக்குத் தெய்வம். அந்த பிரம்மாவிலேயிருந்து ஆரம்பித்து, நாம் ஏற்கெனவே பார்த்தோமே அம்பாள் எல்லோருக்கும் பொறுப்புகளைப் பிரித்துக் கொடுத்தாள் என்று, அப்படி அம்பாளால், ஆக்ஞாபிக்கப்பட்ட அனைத்து தெய்வங்களுக்கும் - ஒவ்வொரு தெய்வத்துக்கும் அததற்கான ஆனந்தம் என்பது உண்டு. இந்தப் பெரிய சந்ததியாக வரிசை, தொடராக - பிரம்மாவில் ஆரம்பித்து அனைத்து தெய்வங்களுடையதுமான சுய ஆனந்தம் என்பது இருக்கிறது.

இந்தத் திருநாமம் என்ன சொல்கிறது என்றால் பிரம்மாவில் ஆரம்பித்து, எவ்வளவு பேரின் எவ்வளவு ஆனந்தம், சந்ததியாகத் தொடர்ந்து இருந்தாலும், அது எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால்கூட அது அம்பாளுடைய ஆத்மானுபவத்துக்கு எதிரே ஒரு சிறு துளியாகக்கூட இருக்காது! அம்பாளுடைய ஆத்மானந்தம் என்பது அவ்வளவு பெரியது! பரமானந்தமாக இருக்கிறாள்.

**பலவிதமாக வெளிப்படுத்த முற்படுகிறபோது.**

**அனைத்தும் உருவாகின்றன.**

இந்த தத்பத லக்ஷ்யார்த்தத்தையும் சரி, அதைத் தொடர்ந்து வரக்கூடிய இரண்டு நாமங்களையும் சரி, ஆழ்ந்து நோக்கினால், அவள் ஸ்வரூபமாக இருப்பதும், ரூப விசேஷங்களையெல்லாம் கடந்து ஸகலமுமாக இருப்பதும், வார்த்தைகளின் வர்ணனைக்கு அப்பாற்பட்டவளாக இருப்பதும் உணர்த்தப்படும்.

## பரதேவதை

**பரா** - இது அடுத்து வரும் திருநாமம். பரதேவதையாக - எல்லா தேவதைகளுக்கும் உயர்ந்தவளாக - பரமாத்மாவாக இருக்கக்கூடியவள்.

**பிரத்யக் சிதி ரூபா** - சித் ரூபமாக இருக்கிறாள் என்பதை ஏற்கெனவே பார்த்தோம். இப்போது, பிரத்யக் சிதி ரூபா! பிரத்யக் சிதி என்றால் உள்முகமாக அந்த சித் ஸ்வரூபத்தை உணர வைக்கக்கூடியவளாக இருக்கிறாள்.

சித் எங்கே இருக்கிறது? வள்ளலார் சொல்லுவார், 'நம் உள்ளுக்குள்ளேயே இருக்கக்கூடிய தெய்வம்தான் சித்.'

சிவவாக்கியரும் இதைத்தான் சொன்னார். சித்தர்கள் எல்லோரும் இதையே பாடினார்கள். ''ஒரு கல்லை நட்டு வைத்து, மந்திரத்தை முணுமுணுவென்று சொன்னால், **நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள் இருக்கையில்?**'' என்று கேட்டார் ஒரு சித்தர்.

நட்ட கல் பேசாது; நம்முள்ளே இறைவன் உறைகிறான் - அவன் நம்முடன் பேசுவான்! என்பது இதன் பொருள்.

இதையே இன்னொரு விதமாகவும் அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம் - நாதன் உள்ளே இருந்தானானால் கல்கூட பேசுகிற மாதிரி தெரியும் என்று!

**(வளரும்)**

# பத்து மார்க் தம்பி!



"வில், அம்புடன் ராமர் போர் புரிந்தார். இது என்ன காலம்?"

"துப்பாக்கி இல்லாத காலம் சார்."

– பாலசுப்பிரமணியன்



"சீக்கிரமா... உன்னை எமன் பிடிக்கப் போறான்னு எப்படிச் சொல்ற...?"

"என் கனவுல ஆபரேஷன் செய்யற டாக்டர் வர்றாரே..."

– க.வேடியப்பன்

"அப்பா, நான் அண்ணனைவிட 10 மார்க்தான் குறைவு!"

"வெரிகுட். அண்ணன் எத்தனை மார்க்."

"10 மார்க்."

– மா.கண்ணன்



பக்கத்து வீட்டுக்காரிகிட்டே ஒரு 'குண்டூசி' கூட கடனா கேக்க மாட்டியா, ஏன்?"

"பின்னால 'குத்தி' காட்டுவா!"

– வெ.சீதாராமன்



மேலப்பொன்னகரம் முதல் சின்ன மண்டவாடி வரை இயக்குநர் சிம்பு தேவனின் பேட்டி படித்ததும் என்னை நெகிழ வைத்தது.

**- நி. கலைச்செல்வன், லால்குடி.**

காஞ்சிப் பெரியவரின் அருள்வாக்கு கல்கியில் தொடர்ந்து வெளிவரட்டும்.

**- கீதா முருகானந்தம், திருவைகாவூர்.**

அக்கம் பக்கமும், சேனல் பகுதியும் கல்கியை மெருகேற்றுகின்றன. வாரா வாரம் விறுவிறுப்பு! சூப்பர்!

**- அ. முரளீதரன், மதுரை - 3.**

தலையங்கம் எங்களின் குரலை எதிரொலிக்கிறது. தே.மு.தி.க. தலைமை எடுக்கும் முடிவால் தமிழகத்தில் மறுமலர்ச்சி வரக் கூடும்.

**- ஆர். பிரகாஷ், பொன்மலை.**




இதுக்கு என்ன அர்த்தம்னு மாடர்ன் ஆர்ட்டுக்கு கொடுக்கப்பட்டுள்ள விளக்கம் அமிர்தாவின் கருத்தா? ஓவியரின் கருத்தா?

**- சுதா, திருப்பூர்.**

கேள்வி பதிலில் மட்டுமல்ல, திரை விமர்சனத்திலும் தராசில் வைத்து எடை போடுகிறீர்கள்.

**- அனந்த கிருஷ்ணன், காஞ்சிபுரம்.**

மருத்துவப் பகுதியில் டாக்டரின் விலாசம், செல் நம்பர் கொடுத்தால் பயனுள்ளதாய் இருக்கும். பரிசீலிக்கவும்.

**- லட்சுமி யம்மாள், சென்னை - 17.**

கோயில் நிலம் விஷயத்தில் இவ்வளவு குளறுபடியா? அரசின் அலட்சியப் புத்தியைக் காட்டுகிறது.

**- அன்புமணி, ஈரோடு.**

எங்களைப் போலத்தான் 'என் செல்லத் தளபதி'யை, விஜய்யும் ஆவலோடு படித்திருக்கிறார்.

**- இரா. கல்யாணசுந்தரம், மதுரை.**

விஜய் பேட்டி படித்தேன். ஒவ்வொரு வார்த்தையும் கர்வம் இல்லாமல் தன்னடக்கத்தோடு இருந்தது. சின்ன வயதில் பெயரும், புகழும் அவருக்குக் கிடைக்க பண்பாடும், தன்னடக்கமும்தான் காரணம்.

**- எஸ். ராமசாமி, ஈரோடு.**

விஜய், வாழ்க்கையில் ஜெயம் பெற வாசகர்களுக்குச் சொல்லியிருக்கும் கருத்துக்கள் நிதர்சனம்.

**- வே. ஈஸ்வரன், இராஜபாளையம்.**

# நில்... கவனி... ~~செல்!~~ கொல்!

அவ்வளவு வேகமாகவும், தெளிவாகவும் அந்த அம்மாள் கூறியபோதே பவித்ராவுக்கு ஒரு விஷயம் மிகத் தெளிவாகத் தெரிந்தது. அவர் கூறியது உண்மை; உண்மையைத் தவிர வேறில்லை.

ஆக டிசம்பர் 7 அன்று குமார் சென்னைக்கு வந்திருக்கிறான்.

''குமார், இங்கே எவ்வளவு நாள் தங்கியிருந்தார்?''

''நாலு நாள் தங்கியிருந்தான். எட்டு நாள் தங்கலாம்னு நினைச்சு வந்திருந்தான்'' என்று கூறியபோது மனத்தாங்கல் வெளிப்பட்டது.

''ஏன்... என்ன ஆச்சு? மேலதிகாரிகள் உடனடியாக வந்து சேரச் சொல்லிட்டாங்களா?''

''அப்படி இருந்தால்தான் பரவாயில்லையே. எல்லாம் இங்கே நடந்த குழப்பம்தான். என்னன்னே தெரியாமல் கண்ணைக் கட்டி காட்டிலே விட்ட மாதிரி இருக்கு. கொஞ்சம் இரு, காப்பி கலந்து தர்றேன். போன தடவையே வேண்டாம்னு சொல்லிட்டுப் போயிட்டே. இந்தமுறை கட்டாயம் குடிச்சாகணும்.''

இதற்கு மேல் எப்படி பேச்சைத் தொடர்வது என்று பவித்ராவுக்குப் புரியவில்லை. ''என்ன குழப்பம்?'' என்று கேட்டால் அது அதிகப்பிரசங்கித்தனம் ஆகிவிடுமே!

''போஸ்ட்'' என்று வாசலில் குரல் கேட்டது.

''ஒரு நிமிஷம் இரு. குருவுக்குதான் வந்திருக்கும். யாராவது வருத்தம் தெரிவிச்சு எழுதியிருப்பாங்க'' என்றபடி வாசற்புறமாக நடந்தாள் அந்த அம்மாள். ஒருவேளை குமாரிடம் இருந்து கடிதமோ? ஷிப்ராவுக்கு வந்திருக்குமோ?

அந்த அம்மாள் திரும்பி வந்ததும், ஆர்வம் மிகுதியில் அந்தக் கடிதத்தின் மேலுறையை - அநாகரீகமான செயல் என்று கூடப் பார்க்காமல் - வெறித்து நோக்கினாள்.

''என்ன பார்க்கறே?'' என்று சட்டென அந்த அம்மாள் கேட்க, பவித்ரா விழித்தாள். ''ஷிப்ராவுக்கு வந்த லெட்டரோன்னு நினைச்சேன்'' என்ற பதில்தான் அவளிடமிருந்து வந்தது.

''இறந்தவளுக்கு எப்படி கடிதாசி வரும்? இருக்கும்போதே அவளுக்கு லெட்டர் வர வாய்ப்பில்லையே'' என்றாள் அந்த அம்மாள் திட்டவட்டமாக.

ஏன் என்பது போல் பவித்ரா வியப்பை வெளிக்காட்ட, அதற்கான விளக்கத்தை அளித்தாள். ''ஷிப்ராவுக்கு லெட்டர் எழுதும் பழக்கமே கிடையாது. ஒரு தடவை 'அஞ்சு வருஷத்துக்கு முன்னாலே பம்பாயிலே இருக்கிற என் மாமாவுக்கு நாலு வரி எழுதியதோடு சரி'ன்னு சொன்னா.''

## திக்திக் தொடர்கதை



# 11

அருண் சரண்யா

பவித்ராவுக்குப் பெரும் அதிர்ச்சி.

''ஆனா, எங்க குமாருக்குக் கடிதம் எழுதறதுன்னா கொள்ளை ஆசை. ஓவியம்கூட நல்லா வரைவான். டிசம்பர் மாதம் வந்திருந்தபோதுகூட ஒரு

ஓவியத்தைக் கொண்டு வந்திருந்தான். ஷிப்ரா அதைப் பார்த்திட்டு ரொம்பப் பாராட்டினா...'' என்று கூறிய அந்த அம்மாள், எதிரே மரம் போல் நின்றிருந்த பவித்ராவை லேசாக உலுக்கினாள்.

உடனே எதையாவது கூறியாக வேண்டும் என்ற கட்டாயத்துக்குத் தள்ளப் பட்ட பவித்ரா, ''குருவும் அந்த ஓவியத் தைப் பாராட்டினாரா?'' என்று வாய்க்கு வந்த கேள்வியைக் கேட்டாள்.

''இல்லை. அப்போ குரு வெளியூர் போயிருந்தான். ரெண்டு நாள் கழித்துதான் வந்தான்.''

**வீ**ட்டுக்கு வந்து படுக்கையில் விழுந்த பிறகும் பவித்ராவை அந்தக் கேள்விகள் சுற்றிச் சுற்றி வந்தன. எது உண்மை? ஷிப்ராவுக்குக் கடிதம் எழுதும் பழக்கமே கிடையாது என்று அவள் மாமியார் கூறியதா? அல்லது லட்சுமிக்கு, தன் மனத்தில் இருப்பதை எல்லாம் கடிதம் மூலமாகத் தெரிவிப்பதாகவும் அவளிடமிருந்து விடைகள் கிடைப்பதாக வும் ஷிப்ரா கூறியதா?

இரண்டிலுமே உண்மை ஒலித்ததாகத் தான் அவளுக்குப் பட்டது. தலை வலித் தது. அறைக்குள் எட்டிப் பார்த்த அம்மா விடம் காஃபி கொடுக்குமாறு கேட்டுக் கொண்டாள். பிறகு தலையை அழுத்திப் பிடித்தவாறே யோசிக்கத் தொடங்கினாள்.

ஷிப்ராவுக்கு லட்சுமி எப்படிப் பழக்கமானாள்? தெரியாது. லட்சுமி யார்? எங்கிருக்கிறாள்? தெரியாது. லட்சுமிக்கு ஷிப்ரா தன் கைப்பட கடிதங்கள் எழுதி யிருந்தால், அது குறித்து அவள் மாமியாருக் குத் தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால், கடிதங்கள் வீட்டுக்கு வரும்போது அது அந்த அம்மாளுக்குத் தெரியாமல் இருக்காதே? ஒருவேளை பதில் கடிதங்கள் ஷிப்ராவின் அலுவலகத்துக்கு வரு கின்றனவோ? அல்லது வீட்டு முகவரி சுமந்து வரும் கடிதங்களை ஷிப்ராவே தபால் அலுவலகத்துக்குச் சென்று முன்ன தாகவே பெற்றுக் கொண்டிருப்பாளோ? அல்லது அவளுக்குப் பதில் வேறு யாராவது?

''இந்தா'' என்றபடி காஃபி தம்ளரை நீட்டினாள் அம்மா.

''ரொம்ப தாங்க்ஸ்மா.'' அம்மா திரும் பிச் செல்லும்வரை அவளையே பார்த்துக்

'மகனே என் மருமகனே' படத்தில்...



கொண்டிருந்த பவித்ராவின் கண்கள், அந்த அறையில் உள்ள பொருள்களைத் தன்னிச்சையாக ஒவ்வொன்றாகப் பார்க்கத் தொடங்கின. இருமுறை இப்படி வலம்வந்த அவள் பார்வை, சட்டென ஒரு பொருளின் மீது பதிந்தது. அவள் மூளை யில் ஒரு பல்பு எரிந்தது. ஒரு பெரிய இரும்புத் திரை சட்டென நொறுங் கியதுபோல் தோன்றியது. இத்தனை நாள் இதனை ஏன் யோசிக்க மறந்தோம்?

ஆக, லட்சுமியின் இடம் தெரிந்து விட்டது.

அடுத்த நாள் காலையில் பவித்ரா வுக்கு ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது.

''நான்தான் குமார். சென்னை வந்திருக் கேன். நேத்துதான் தகவல் கிடைத்தது. அண்ணி இறந்துட்டாங்களாமே! எதனாலே இறந்தா? ஏன் இதை எனக்கு யாருமே தெரிவிக்கலே? போன வாரம் ஃபோன் செய்தப்பகூட நீங்களும் சொல்லலியே! ஷிப்ராவின் இறப்பு எனக்கு ரொம்ப அதிர்ச்சியா இருக்கு. நான் உங்களைப் பார்க்கலாமா?''

பவித்ரா சம்மதித்தாள். கூடவே அவள் மனத்தில் ஒரு குறுகுறுப்பு. 'அண்ணி என்கிறார்; ஷிப்ரா என்கிறார். தவிர அவளைப் பற்றிக் குறிப்பிடும்போது ஒருமையும் பன்மையும் மாறி மாறி வருகின்றன.''

அன்று மாலையே பவித்ராவின் வீட்டுக்கு குமார் வந்து சேர்ந்தான்.

**(திக்திக்)**

**''ஹரிதேந்திரனின் மரணமும், அதனைத் தொடர்ந்த அவருடைய இதயத்தைத் தானம் கொடுத்த அவரது பெற்றோரின் மனிதநேயத்தையும், இதய முள்ள எவராலும் மறக்க முடியாது. எல்லோரையும் நெக்குருக வைத்த சம்பவம் அது. அந்தச் சம்பவம் போல என்னுடைய 'மகனே என் மருமகனே' படத்திலும் ஒரு காட்சி வருகிறது. ஆறு மாதங்களுக்கு முன்பே என்னால் கற் பனையாக உருவாக்கப்பட்ட காட்சி அது. இன்றைக்கு அது உண்மையாகி இருக் கிறது. இதுதான் வாழ்வின் வினோதம். 'மகனே என் மருமகனே' எனக்கு 24 வது படம். வீடு, மனைவி, மக்கள் படத்தின் மூலம் அறிமுகமான எனக்கு, 'மகனே என் மருமகனே' படம் இன்னொரு திருப்பு முனையாக அமையும். நடிகர் விவேக் இதில் கதாநாயகனாக நடிக்கிறார். கிராமத்து மனிதர் பாத்திரத்தில் நேட்டி விட்டி மாறாமல் ஒரு தேர்ந்த நடிப்பைத் தந்திருக்கிறார். அவருக்கு இந்தப் படம் நல்ல பெயரைக் கொடுக்கும். இந்திர லோகத்தில் நா. அழகப்பன் படத்தில் வடிவேலுவுக்கு ஜோடியாக நடித்த யாமினி சர்மாதான் விவேக்குக்கு ஜோடி. விவேக்குக்கு இணையான கதாபாத்திரத் தில் மிதுன் என்பவர் நடிக்கிறார். அவ ருக்கு ஜோடியாக புதுமுகம் தேன்மொழி கதாநாயகி. இந்தப் படத்தில் வழக்கம் போல நானும் நடிக்கிறேன்'' என்கிறார் படத்தின் இயக்குநர் பி.டி. கஜேந்திரன். இந்தப் படத்தை ராஜ் டிவி தயாரிக்கிறது. மதுரையில் பிரச்னை வராமா... பாத்துங் கப்பா.**

**– கண்மணி**

# ஒரு ரூபாய் அரிசி... உண்மை நிலவரம்!

**ஒரு ரூபாய் அரிசியை மக்கள், சமைத்துச் சாப்பிட முடியாது. கோழிகளுக்குத் தீவனமாகப் போட்டால்தான் உண்டு என்று எதிர்க்கட்சிகள் பரவலாக விமர்சிக்க, அந்த அரிசியின் தரம் குறித்து மக்கள் என்ன சொல்கிறார்கள் என்று அறிய நேரடியாகக் களத்தில் குதித்தோம்.**

**சென்னை புதுப் பெருங்களத்தூரில் ஆர்.எம்.கே. நகரில் உள்ள ரேஷன் கடையில் சின்னசாமி :**

''அரிசி நல்லாத்தான் வருது. சிலசமயம் கொஞ்சம் மோசமாக இருக்கும். ஆனால், இட்லி, தோசை பலகாரத்துக்கு மிக நன்றாய் இருக்கிறது. இப்போது உளுத்தம் பருப்பும், பயத்தம் பருப்பும் சகாய விலை யில் கிடைக்கின்றன. மசாலாப் பொருட் களை ஐம்பது ரூபாய்க்குக் கொடுக்கிறார்

## கட்டப்பட்ட கைகள்!

நாம் கேட்டறிந்த மக்களின் கருத்துக் களைச் சொல்லி, அரிசிக் கடத்தல் குறித்த விவகாரங்களையும் கேட்கலாம் என்று உணவு அமைச்சர் எ.வ.வேலுவைத் தொடர்பு கொள்ள முயன்றோம். 'ஐம்பது ரூபாய் மசாலாப் பொருட்கள் கொடுக்கும் ஏற்பாட்டில் அமைச்சர் பிஸியாக இருக் கிறார்' என்று தகவல் தரப்பட, உணவுத் துறை உயர் அதிகாரிகளிடம் பேசினோம். ''ஒரு ரூபாய் அரிசியைப் பற்றி வைக்கப் படும் விமர்சனம் முரணாக இருக்கிறது. தரம் சரியில்லை; கோழிகளுக்குப் போடு கிறார்கள் என்கிறார்கள். அதே சமயம் 'கடத்தப்படுகிறது' என்றும் சொல்கிறார் கள். தரம் இல்லாவிட்டால் கடத்து வார்களா? கடத்தலுக்கு எதிராக கடந்த இரண்டு வருட காலத்தில் எடுத்த நடவடிக்கையால், 98 பேர் கைதாகியுள் ளனர். நாங்கள் அதிக அளவில் கடத்தலைப் பிடிக்கிறோம். அதனால், கடத்தலும் குறைந் திருக்கிறது என்பதுதான் உண்மை. மாறாக, கடத்தல் அதிக அளவில் பிடிபடுவதா லேயே கடத்தல் கூடுதலாகி விட்டது என்று கிளப்பிவிடுவது எப்படிச் சரி?'' என்று கேட்கிறார்கள் அதிகாரிகள்!

''அமைச்சர் வேலு, தமிழ்நாட்டில் எல்லைப் பகுதிகளிலும், மூலைமுடுக்கு களிலும், அலைந்து திரிந்து ரேஷன் பொருட்களின் விநியோகம், சீராக நடப்பதற் கும், கடத்தல் முடக்கப்படுவதற்கும்



* ஒரு ரூபாய் அரிசி வாங்கும் பொதுமக்கள்...

ஸ்பாட் விசிட்

கள். ஆனால் நாலைந்து பேர் இருக்கிற குடும்பத்துக்கு அந்த மசாலாப் பொருட்கள் ஒரு மாதத்துக்குப் போதுமா? நோக்கம் எதுவாக இருந்தாலும், ஒரு ரூபாய் அரிசி யால் எங் களைப் போன்ற ஏழைகள் குறைந்த பட்சம் ஒரு வேளை

போராடி வருகிறார். ஆனால், எங்கள் உணவு இலாகாவின் நேரடி நிர்வாகம் மற்றும் கட்டுப்பாட்டில் பொது விநியோகத் திட்டம் நடைபெறவில்லை என்பதுதான் யதார்த்த நிலை'' என்கிறார்கள் அதிகாரி கள். 29,793 ரேஷன் கடைகளில் 28,000 கடைகளின் நிர்வாகம் கூட்டுறவுத் துறை யைச் சார்ந்ததாம். இதுதவிர, ரேஷன் பொருட்கள் விநியோகம் போன்றவை மாவட்ட மற்றும் வட்ட வழங்கல் அதிகாரி களின் கட்டுப்பாட்டில் உள்ளது. இவர்கள் வருவாய்த் துறையின் கீழ் இயங்குபவர்கள். இந்த நிலையில், விநியோகம் மற்றும் கடைகளில் தவறுகள் நடக்கும்போது, நடவடிக்கை எடுக்கமுடியாமல் உணவு இலாகாவின் கைகள் கட்டப்பட்டிருக் கின்றன. ''வழங்கல் அதிகாரிகளிடமுள்ள பொறுப்பு, ரேஷன் கடைகளின் நிர்வாகம் அனைத்தும் நேரடியாக உணவுத் துறையின் கட்டுப்பாட்டுக்கு மாற்றப்பட வேண்டும்'' என்கிறார் ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரி.

பொது விநியோகத் திட்டத்தில், மத்திய அரசிடம் மாதம் மூன்று லட்சம் மெட்ரிக் டன் அரிசி வாங்கப்படுகிறது. வறுமைக் கோட்டுக்கு மேலே உள்ளவர்களுக்கு கிலோ ரூபாய் 8.30, கீழே உள்ளவர் களுக்கு ரூபாய் 5.60 என்ற விலைக்கு, மாநில அரசுக்கு விற்கிறது மத்திய அரசு. இந்த அரிசி ஒரு ரூபாய்க்கு விற்கப்படும் போது ஏற்படும் இழப்பு, 'மான்யம்' என்ற பெயரில் அரசால் ஈடுகட்டப்படுகிறது. வருடத்துக்கு அரிசிக்காக இந்த வகையில் தமிழக அரசு கொடுக்கும் மான்யம் சுமார் 2300 கோடி.

யாவது வயிறாரச் சாப்பிட முடிகிறது'' என்கிறார்.

**ஆறுமுகம், மன்னிவாக்கம் :**

''இந்த முறை அண்ணா நூற்றாண்டு விழாவுக்காக கட்சிக் காரங்க பத்து கிலோ அரிசி இலவசமாகக் கொடுத்தாங்க'' என்றார். (இது என்ன புதுக்கதை?) ''பாமாயில், கோதுமை... பல சமயங்களில் கிடைக்காது. மண்ணெண் ணெய் அளவு குறைவாக இருக்கும். ரேஷன் அரிசி தொடர்ந்து வாங்குகிறேன். அரிசியை வேண்டுமானால் இன்னும் தரமாக, கொஞ்சம் அதிக விலைக்குத் தந்து, மற்ற மளிகைச் சாமான்களை இன்னமும் சகாயமாகக் கொடுக்கலாமே.''

**“உணவு இலாகாவின் நேரடி நிர்வாகம் மற்றும் கட்டுப்பாட்டில் பொது விநியோகத் திட்டம் நடைபெறவில்லை!”**



* அமைச்சர் எ.வ.வேலு



* ஆறுமுகம்

**''சுமார் இரண்டு கோடி கார்டுகள் இருக்கின்றன. அதில் ஒரு கோடியே எண்பத்தாறு லட்சம் கார்டுகளுக்கு, அரிசி கொடுக்கிறோம். கடத்தலைத் தடுத்ததனா லும், போலி ரேஷன் கார்டுகளை ஒழித்தத னாலும், கிடங்குகளிலிருந்து கடைகளுக் கான கொள்முதல் (offtake) அளவு 72 சதவிகிதமாகக் குறைந்திருக்கிறது. எங்கள் துறைக்குப் போதிய அவகாசம் இல்லாவிட் டாலும், மற்றவர்களின் ஒத்துழைப்புடன் ஆயிரக்கணக்கான கடைகளுக்கு மாதா மாதம் அரிசி, சர்க்கரை, மண்ணெண்ணெய் உட்பட எல்லா அத்தியாவசியப் பொருட் களையும் சரியாக அனுப்பிவிடுகிறோம். எங்களைப் பாராட்டாவிட்டாலும் பரவா யில்லை. ஆனால் கற்களை வீசாதீர்கள்'' என்கின்றனர் உணவுத்துறை அதிகாரிகள்.**

**- ப்ரியன்**

நகருக்குள் உள்ள சில கடைகளுக்கு விஸிட் அடித்தோம். கீழ்ப்பாக்கம் போலீஸ் குடியிருப்பில், பூங்கா நகர் கூட்டுறவு பண்டகச் சாலையில் குப்பு என்ற பெண்மணி, ''இரண்டு ரூபாய்க்கு எந்த அரிசியைக் கொடுத்தாங்களோ, அதே அரிசியைத்தான் இப்போதும் கொடுக்க றாங்க. மிளகாய், மஞ்சள், தனியாப் பொடி கொடுக்கப் போறதும் எங்களுக்கு ரொம்ப உதவியா இருக்கும்'' என்று நெகிழ்ந்தார்.

ஒட்டேரி வள்ளுவர் ரேஷன்கடையில் வள்ளி, ''சில சமயங்களில் புழுங்கல் அரிசி கொஞ்சம் கறுப்பு நிறமாக இருக்குதுங்க. பருப்பு மலிவு விலைக்குப் போடறது எங்களுக்கு உபயோகமாக இருக்கு. அரிசி, சர்க்கரை, தவிர மற்றப் பொருட் கள் எப்போதும் ஸ்டாக் இருக்குமான்னு தெரியலை. அதனால் அடிக்கடி கடைக்கு வந்து பார்க்க வேண்டியிருக்கு'' என்றார்.

''எங்கள் கடையில் 2500 ரேஷன் கார்டுகள் பதிவுசெய்யப்பட்டிருக்கின்றன. அதில் 2000 கார்டுகள் அரிசி கார்டுகள். தவிர, 90 சதவிகிதம் மக்கள் அரிசி வாங்கி விடுகிறார்கள். சில ரேஷன் கடைகளில் இடவசதி இல்லாத காரணத்தால், மலிவு விலை மளிகைச் சாமான்கள் வைக்க முடிவதில்லை. மற்றபடி ரேஷன் கடைகளிலிருந்து அரிசி கடத்துவது என்பது சாத்தியமில்லை'' என்கிறார் புரசைவாக்கம் வடமலைத் தெரு ரேஷன் ஊழியர்.

ஏழைகள் இந்த அரிசியை வாங்கி ரெடிமேட் இட்லி, தோசை மாவு கடைகளில் பத்து ரூபாய்க்கு விற்கவும் செய்கிறார்கள். வெளிமார்க்கெட்டில் நடுரக அரிசி விலை பதினைந்து, இருபது ரூபாய் என்று விற்கிற நிலையில், மளிகைக் கடைக்காரர்கள் ஏழைகளிடமிருந்து ரேஷன் அரிசியை, வாங்கி, அதிக விலைக்கு விற்கிறார்கள். ஆனால் பொதுவாகவே தரமான அரிசி வழங்கப்படுவதாகவும், எப்போதாவது மோசமாக இருக்கிறது என்பதுமே மக்களின் புகார்



* ரேஷன் கடை ஊழியர்



* குப்பு

**- கௌசி**

படங்கள் : **ராஜன்**



பேசுவதாய் நினைக்க வேண்டாம். இது நிதர்சன உண்மை. ஆய கலைகள் அறுபத்து நான்கில் விடுபட்டுப்போனது 'பரீட்சை யில் காப்பியடித்தல்'. நான் காப்பியடிப்பதில் கொஞ்சம் 'வீக்' என்றாலும், என் நண்பன் ஜெய்கணேஷ் எவ்வளவு ஆபத்தான சூழ்நிலையிலும், விதவிதமான டெக்னிக்குகளில் பதில் எழுதிய பேப்பரை எனக்குக் காண்பிக்கும் 'திறமைசாலி'. ஆறாவது படிக்கையில் வகுப்புத் தேர்வுகளில் எங்கள் நட்பு இப்படித்தான் தொடங்கியது.

ஜெய்கணேஷ் நன்கு கவிதை எழுதுவான். 'காத்திருந்து காத்திருந்து காலங்கள் போனதடி' சினிமாப் பாடலை, 'காத்திருந்து காத்திருந்து தரிசிக்க வந்தோமய்யா' என ஐயப்பன் பாடலாக மாற்றிவிடுவான். பள்ளியில் நடக்கும் போட்டிகளில், நான் ஓவியப்போட்டியில் பரிசு பெற்றால் அவன் கவிதைப் போட்டியில் பரிசு பெறுவான். பேச்சுப் போட்டியில் பரிசு பெறும் அமல்ஆனந்த் மற்றொரு நண்பன். நல்ல பேச்சாற்றல் கொண்டவன். தப்பாய் ஆரம்பித்தால்கூட சமயோசிதமாக மாற்றி சரியாக முடிப்பான். நிறைய பரிசுகள் பெற்றோம். ஒருமுறை மூவரும் எதுவும் செய்யும் 'மகா கலைஞர்கள்' என்ற தெனாவெட்டில், அவரவர் வேலைகளை மாற்றிக்கொண்டோம். நான் கவிதை எழுதினேன். ஜெய்கணேஷ் பேச்சுப் போட்டியில் ஏறினான், அமல் ஆனந்த் ஓவியம் வரைந்தான். மூவரும் தோற்றுப் போனோம்! நீதி : சைக்கிள் பழகிய வுடனேயே கையை விட்டுவிட்டு ஓட்ட முயற்சிக்கக் கூடாது.

நண்பர்கள் இல்லாமல், எந்த ஒரு நபரின் வாழ்க்கைப் பாதையும் தீர்மானிக்கப்படுவதில்லை. நட்பு, குடும்ப உறவுகளை விடவும் ரொம்ப நெருக்கமானதும், ரகசிய மற்றதும்கூட! குறிப்பாக வெற்றி, தோல்வி எந்த நிலையிலும் நம்மை நிதான நிலையில் வைக்க உதவும் நியாணம் போன்றது நண்பர்கள் உறவு. தொழிலுக்குப் போகும் முன் அமைகிற (இளமைக்கால) நட்பு உண்மையானது; எதிர்பார்ப்பற்றது. நண்பர்களை 'பள்ளிக்கு முன்' 'பள்ளிக்குப் பின்' என இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

முதலில் 'பள்ளிக்கு முன்' நட்பு! நல்ல நட்பு உதவியில்தான் ஆரம்பிக்கிறது. ஆம்; இப்பூவுலகில் உதவியிலேயே சிறந்த உதவி பரீட்சையில் திக்கதியாய் முழிக்கும் நண்பனுக்குத் திருட்டுத்தனமாகப் பார்த்து எழுத பேப்பர் கொடுப்பதுதான். ஏதோ வள்ளுவர் ரேஞ்சுக்குப்

# ப.மு..., ப.பி...

## இயக்குநர் சிம்புதேவன்

என்னை இயக்கியவர்கள்-11

பத்தாவது படிக்கையில் சைக்கிளில் 'சகல வித்தைகளும்' காட்டியபடி, கணக்குப் பாடத்துக்கு ஆரோக்கிய சாமியிடம் ட்யூஷன் போவோம். நண்பன் பிரபு நன்கு படிப்பான்; சரண வன், அதைவிட நன்கு படிப் பான். நாங்கள் ஐந்து பேரும் தான் ஒரு செட். ஜெய்கணே ஷும், அமலும் மக்கு தடிகள் போலவே இருந்து, நிறைய மார்க் எடுத்து விடுவார்கள். சரவணனும், பிரபுவும் வாத்தியார் போல் நன்கு சொல்லித் தருவார்கள். நான்தான் ரெண்டும்கெட்டான் திலகம். படிக் கிறோம் பேர்வழி என எந்நேரமும் சதீஸ் வீட்டிலேயே அரட்டையடித்துக் கிடப்போம். பத்தாவது இறுதித் தேர்வில் - கணக்குப் பாடத்தில் பன்னிரெண்டு மார்க்குக் கேள்வியின் கடைசி பதிலில் 3 x 6 = 18 என்பதற்குப் பதில் 3 x 8 = 24 எனப் போட்டு விட்டேன். ஏன் '8' ஐ போட்டுப் பெருக்கினேன் என, எனக்கே தெரியவில்லை. கிட்டத்தட்ட முக்கால் வாசி தமிழகமே 'சென்டம்' (நூத்துக்கு நூறு) எடுத்த அந்தத் தேர்வில் நான் மட்டும்தான் 88 மார்க்.



நண்பர் அருளுடன்...

**பி.**எஸ்ஸி., முடித்துவிட்டு சென்னை வந்து ஆனந்தவிகடனில் சப்-எடிட்டராக இருந்த நேரம். என்னைவிட மிக அதிக மார்க்குகள் வாங்கிய என்ஜினியரிங் ஜெய் கணேஷ், அமல், பிரபு, எல்லோரும் வேலை கிடைக் காமல் மேன்ஷன் அறையில் முடங்கிக் கிடந்தார்கள். பரிதாப மாக இருக்கும். வேலை தேடும் அவர்களுக்குச் சாப்பாடுகூட நான்தான் வாங்கித் தருவேன். கிட்டத்தட்ட 'அவள் ஒரு தொடர்கதை' சுஜாதா போல் என்னை நானே நினைத் துக்கொள்வேன்.

காலம் உருண்டது. விகட னிலிருந்து விலகி உதவி இயக்குநராகப் போன நேரம். கையில் சல்லிக் காசு இல்லாமல் இருந்த போது, அவர்கள் மூவ



* சரவணன், ஜெய், நான், அமல், பிரபு...

ரும் சாஃப்ட்வேர் இன்ஜினீயர்களாகி கிட்டத்தட்ட பில்கேட்ஸ் ரேஞ்சுக்கு வந்துவிட்டார்கள். ஒருவேளை சாப்பாடு வாங்கிப் போட்ட எனக்கு, கிட்டத்தட்ட மூன்று வேளையும் ஜெய் கணேஷ்தான் சாப்பாடு வாங்கிப் போட்டான். வறுமையே தெரியாமல், அவன் வீட்டு ஹோம் தியேட்டரில்தான் டி.வி.டி. பார்ப்பேன். நெருக்கடியின் போது சரவணன் சிங்கப்பூரிலிருந்து பணம் அனுப்புவான். பொருளாதாரரீதியாக என்னைப் பாதுகாத்து, நான் இயக்குநர் ஆவதற்கு ஒவ்வோர் அங்குலத்தையும் உடனிருந்து கடக்க வைத்தார்கள். மறக்க முடியாத நாட்கள் அவை.

**அ**டுத்தது, 'பள்ளிக்குப் பின்' நட்பு! பிரகாஷ், சரவணன், அருள் மனோகரன், முருகானந்தம் நாங்கள் எல்லோரும் ஒரே ஏரியாவை சேர்ந்தவர்கள். ஆளுக்கொரு கோர்ஸ் படித்தாலும், ஒரே பஸ்ஸில்தான் கல்லூரிக்குப் போவோம். பத்து மணி கல்லூரிக்கு எட்டே காலுக்குக் கிளம்பும் ஜீவன்கள் நாங்களாகத்தான் இருப்போம். கிராஸ் ரோட்டில் பத்து நிமிஷம், சந்தையில் பத்து நிமிஷம், கீழவாசல் பஸ் ஸ்டாப்பில் அரை மணி நேரம் என அங்கெல்லாம் இடத்தைத் தேய்த்துவிட்டுத்தான் கல்லூரியை அடைவோம். வாய் கழன்று விழும் அளவுக்கு எப்பவும் பேச்சும், சிரிப்பும்தான்.

நாங்கள் போகும் கோச்சடை டு தெப்பக்குளம் - 12ம் நம்பர் பஸ் மொத்தம் இருபத்தி மூன்று தியேட்டர்களைக் கடந்து செல்லும். எனவே, பல தியேட்டர்களில் டிஸ்கௌண்டில் டிக்கெட் கொடுக்கும் அளவுக்கு, நாங்கள் ரெகுலர் கஸ்டமர் ஆகிவிட்டோம். தெலுங்கு டப்பிங் படத்தைக்கூட கட் அடித்துவிட்டுப் போய்ப் பார்த்துவிடுவோம். சரவணனுக்குச் சாயந்திரம் அஞ்சு - பத்து பஸ்ஸை விட்டால் வீட்டுக்குப் போக வேறு பஸ் கிடையாது. அவன் நச்சு பண்ணி எங்களையும் இழுத்துப்போய் விடுவான் என்பதால், கிட்டத்தட்ட எல்லாப் படங்களின் கிளைமாக்ஸை மட்டும் பார்க்க மாட்டோம். 'இவ்வளவு நேரம் தாக்குப் பிடிச்சுட்டீங்க! கிளைமாக்ஸைப் பார்த்துரலாமேப்பா!' என தியேட்டர் வாட்ச்மேன் எங்களிடம் பரிதாபமாகக் கேட்டார்.

**க**ல்லூரி முடித்து விகடனில் வேலைக்குச் சேர்ந்தபின், மதுரையில் எங்கள் சந்திப்பு மிக உற்சாகமாக இருக்கும். அப்போது சரவணன் பெங்களூரில், பிரகாஷ் மதுரையில், அருள் திருநெல்வேலியில் என ஆளுக்கொரு பக்கமாகச் செட்டிலாகிவிட்டோம். ஹோட்டல்களில் அமர்ந்து மணிக்கணக்காகப் பேசுவோம்.

சொந்தச் சம்பாத்தியம் என்பதால் 'ஆணவமான' விவாதங்கள் இருக்கும். தவறாமல் மடப்புரம், சக்கரத்தாழ்வார் கோயிலுக்குப் போவோம்.

ஒருமுறை சந்திப்பில், நான் வேலையை விட்டுவிட்டு சினிமாவுக்குப் போகப் போகிறேன் என்றபோது எல்லோருக்கும் ஷாக்! பிரகாஷையும், அருளையும் விட சரவணன் என் முடிவில் பயந்தான். பரமபதம் மறுபடி ஜீரோவில் இருந்து தொடங்குவது போலத்தானே? முடிவில் 'சரி விடுப்பா... பார்த்துக்கலாம்' என்றார்கள்.



✱ பிரகாஷ் மற்றும் சரவணனுடன்...

அதன்பின் உதவி இயக்குநராக இருந்தபோது எனக்குக் கிட்டத்தட்ட இருண்ட காலம் மாதிரிதான். ஓரளவு பணம் கிடைத்தால்தான் மதுரைக்குப் போவேன். மதுரை சென்றால் பெரும்பாலும் பிரகாஷ்தான் என் செலவுகளைப் பார்த்துக்கொள்வான். நண்பர் பாலா கடையில் புரோட்டா சாப்பிட்டு விட்டு, இரவு படத்துக்குப் போவோம். நிறைய பகிர்ந்துகொள்வோம். நண்பர்கள் தரும் நம்பிக்கைதான் உற்சாகமானது. சென்னை செல்ல அவன்தான் டிக்கெட் எடுப்பான். பைக்கில் கொண்டு போய் பஸ் ஸ்டாண்டில் விடுவான். ஒவ்வொரு முறையும் நம்பிக்கையோடு உயிர்த்தெழுந்து கோடம்பாக்கம் வருவேன்.

நம் வெற்றியை யார் வேண்டுமானாலும் பகிர்ந்து கொள்ளலாம். கஷ்டங்களை நண்பர்கள்தான் பகிர்ந்துகொள்ள முடியும். 'புலிகேசியும்' 'அறை எண் 305-ல் கடவுளும்' என்னை விட அவர்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுத்திருக்கும். ஜெயகணேஷ், பிரகாஷ், சரவணன் இவர்கள் எல்லாரும்தான், என் வேர்களுக்கு நீர் கொடுத்தவர்கள். இவர்கள் என் கஷ்டங்களைப் பகிர்ந்துகொள்ளாமல் போயிருந்தால் புலிகேசி, கடவுள் என சினிமா இயக்குநராகும் வாய்ப்பை அடைந்திருக்க மாட்டேன். நான் இயக்குநரானதில் என்னைவிட இவர்களுக்குத்தான் அதிக சந்தோஷம். நெகிழ்வுக்குரிய உறவு இது!

**"நம் வெற்றியை யார் வேண்டுமானாலும் பகிர்ந்து கொள்ளலாம். கஷ்டங்களை நண்பர்கள்தான் பகிர்ந்து கொள்ளமுடியும்!"**

(பேசுவேன்)

"**ந**ம் நாட்டின் வரலாற்றிலேயே, சுதந்திரத்துக்காக நடைபெற்ற மாபெரும் போராட்டம் என்று பேசப்படப் போகும் இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியில், இன்று உங்களோடு இணைந்து கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.''

இப்படித் தொடங்குகிறார் மார்ட்டின் லூதர் கிங்.

''ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் ஒவ்வொரு குக்கிராமத்திலிருந்தும் விடுதலை கீதம் ஒலிக்கும்போது, ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் ஒவ்வொரு நகரத்திலிருந்தும் விடுதலை கீதம் ஒலிக்கும்போது, கறுப்பர்கள், வெள்ளையர்கள், யூதர்கள், யூதர்கள் அல்லாதோர், ப்ராட்டஸ்டண்டுகள், கத்தோலிக்கர்கள்... எனத் தேவனின் குழந்தைகள் அனைவரும் கரம் கோத்துக்கொண்டு கீழே உள்ள நீக்ரோ ஆன்மிகப் பாடலைப் பாடும் நாள் அப்போது உதயமாகும்.

விடுதலை பெற்றுவிட்டோம்! விடுதலை பெற்றுவிட்டோம்! எல்லாம் வல்ல தேவனே! நன்றி! இறுதியாக நாங்கள் விடுதலை பெற்றுவிட்டோம்!''

இப்படி முடிகிறது அந்த உரை. அமெரிக்க வரலாற்றில் மிக அழுத்தமாகப் பதிந்து போன உரை அது. இனவெறி உச்சத்தில் இருந்த சமயம் அது. வெள்ளையர்களுக்குத் தனி பள்ளிக்கூடம்; கறுப்பர்களுக்குத் தனி, வெள்ளையர்கள் உபயோகிக்கும் சாலைகளில் கறுப்பர்களுக்கு அனுமதியில்லை. குழந்தைகள் விளையாடும் இடங்கள்கூட தனித் தனி. உடல் ரீதியாக மட்டுமல்ல, உணர்வு ரீதியாகவும் கறுப்பர்கள் மிருகத்தனமாக ஒடுக்கப்பட்டார்கள்.

மார்ட்டின் லூதர் கிங் ஒரு கனவு கண்டார். ஒவ்வொரு பள்ளமும் மேடாக்கப்படுவது போல், வெள்ளையர்களுக்குச் சமமாகக் கறுப்பர்கள் நடத்தப்படுவதுபோல், கறுப்பின மக்கள் சுதந்திரக் காற்றைச் சுவாசிப்பதுபோல்.

கனவு கண்டதோடு நிறுத்திக் கொள்ளவில்லை கிங். போராட ஆரம்பித்தார். வன்முறைப் பாதை அல்ல; அறவழிப் பாதையைத் தேர்ந்தெடுத்தார். இரண்டு பரிசுகள் அவருக்குக் கிடைத்தன. நோபல், படுகொலை.

ஆகஸ்ட் 28, 1963 சில முக்கிய கோரிக்கைகளுடன் வாஷிங்டனை நோக்கி ஒரு மாபெரும் நடைபயணத்தைத் தொடங்கி வைத்தார் மார்ட்டின் லூதர் கிங். அப்போது அதிபராக இருந்தவர் ஜான் கென்னடி.



* மார்ட்டின் லூதர் கிங்

மருதன்

கறுப்பர்கள் கூட்டம் கூட்டிப் பேசப் போகிறார்கள் என்னும் செய்தி கேட்டதுமே முகத்தைச் சுளுக்கிக்கொண்டார் கென்னடி. 'இவர்களுக்கு வேறு வேலையே கிடையாதா? எப்போது பார்த்தாலுமா போராடிக் கொண்டிருப்பது? ஆர்ப்பாட்டம், அடிதடி என்று ஏதாவது நடந்தால் நிலைமை மோசமாகி விடுமே.' பிறகுதான் தெரிந்தது தலைமை தாங்குபவர் மார்ட்டின் லூதர் கிங் என்று. உடனே சரி என்று உத்தரவிட்டுவிட்டார். மார்ட்டினின் மீதுள்ள நம்பிக்கையால் அல்ல. மார்ட்டின் சுமந்து சென்ற அகிம்சை என்னும் ஆயுதத்தின் மீது கொண்ட நம்பிக்கையால் அளிக்கப்பட்ட உத்தரவு அது.

இந்த நடைபயணத்தில் இரண்டு பிரதானமான கோரிக்கைகளை அழுத்தமாக முன்னிறுத்தினார் மார்ட்டின்.



# லூதரின் கனவு

கறுப்பர்களுக்கு வேலை வாய்ப்புகள், சுதந்திரம்.

கறுப்பின மக்கள் அவருக்குப் பின்னால் அணிதிரள ஆரம்பித்தார்கள். நூற்றுக்கணக்கில். ஆயிரக்கணக்கில், மில்லியன் கணக்கில். வாஷிங்டனில் உள்ள லிங்கன் நினைவுக்கூடத்தை அடையும்போது அந்த நகரமே திகைத்து நின்றுவிட்டது.

மார்ட்டின் லூதர் பேசிக்கொண்டிருந்தார்.

''தேடாமல் கிடைத்த துன்பங்களுக்கு மீட்சி நிச்சயம் உண்டு என்ற நம்பிக்கையுடன் தொடர்ந்து பணியாற்றுங்கள். ஏதாவது ஒரு வழியில் இந்தச் சூழ்நிலை நிச்சயம் மாறும்; மாற்றப்படும். இன்றும் நாளையும் நம்மை இன்னல்கள் எதிர்கொண்டாலும், நான் ஒரு கனவு காண்கிறேன் என்பதை இன்று உங்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.''

மார்ட்டின் லூதரின் கனவு பெரிதாகப் பலித்துவிட்டதாகச் சொல்லமுடியாது. அடுத்த அதிபராக ஒரு கறுப்பினத்தவர் அங்கே முன்னிறுத்தப்பட்டாலும், இன்றைய சூழல் கறுப்பின மக்களுக்குத் தோதானதாக இல்லை. ஆகவேதான் மார்ட்டின் லூதரின் இந்தக் கனவு உரையை அவர்கள் மீண்டும் மீண்டும் எடுத்து வாசித்துக் கொண்டிருக்கிறார்கள். ○


"ஏண்டா! எல்லாப் பாடத்திலேயும் பெயிலாயிருக்கே...
இனிமே என்னை அப்பான்னு கூப்பிடாதே"
"சரிங்க! ராமசாமி!?"
-மா.கண்ணன்
இடி சிரிப்ஸ்

# Dr.Kamakshi Memorial Hospital



Dr. T.G. Govindarajan
President - Founder - Medical Director

தமிழ்நாட்டிலேயே முதல்முறையாக உடலிலுள்ள புற்றுநோய்
மற்றும் இதர நோய்களை எளிதில் கண்டறிய உதவும்

## PET CT Scan

மருத்துவ சேவை நிறுவனத்தில் ஒரு மைல்கல்
தமிழகத்தில் இதுவே முதல் முறை

**Dr. காமாட்சி மருத்துவமனை**

கேன்சர் இன்ஸ்டிடுட் (wia)
இணைந்து பெருமையுடன்
அறிமுகம் செய்துள்ளது




CANCER INSTITUTE
Canal Bank Road
Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : 93814 36899
93814 36896

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* பெட் சி.டி.ஸ்கேன் என்பது உடல் அணுக்களின் செயல்திறன் பற்றியும் அணு பெருக்கத்தைப் பற்றியும் முழு தகவல்களைத் தரவல்லது.
* முக்கியமாக பெட் சி.டி.ஸ்கேன், மனிதனின் உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரை முழுவதும் பரிசோதிப்பதால், உடலில் எங்கெல்லாம் புற்றுநோய் இருக்கிறது? அது வேறு எங்கெல்லாம் பரவியிருக்கிறது? நோயின் தீவிரம் எந்த அளவு உள்ளது? என்பதை எல்லாம் துல்லியமாகக் கண்டறியப் பயன்படுகிறது.
* அதேபோல், ரேடியோதெரபி, கீமோதெரபி போன்ற சிகிச்சைகளுக்குப் பின் 'பீரியாடிகல் ரிவியூ' மூலம் நோயின் தாக்கம் எவ்வளவு குறைந்துள்ளது என்பதையும் கண்டறியலாம்.
* மூளையில் ஏற்படும் 'அல்ஸோமெர்ஸ்', 'பார்க்கின்சன்ஸ்', புற்றுநோய் போன்ற நோய்களை கண்டறியவும், அவற்றுக்கு எளிய முறையில் கண்டறியவும், 'பெட் சி.டி ஸ்கேன்' பயன்படுகிறது.
* புற்றுநோய்க்கு சிகிச்சை அளிக்கும் மருத்துவர்களுக்கு எந்த மாதிரியான சிகிச்சை முறையை பின்பற்ற வேண்டும் என்று தெளிவாக உணர்த்துகிறது. இதயத்தில் உள்ள பிரச்னைகள் மற்றும் தசைகளின் செயல்பாடுகளை அறிய உதவுகிறது.

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷினி - 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

